# நாமக்கல் கவிஞர் ::
# :: நாவன்மை...!

ஆக்கியோன்

திருவத்திபுரம், வித்துவான்

மாவண்ணா. தேவராசன்.

ஸ்ரீ இலக்ஷ்மி நூல் பதிப்பகம்,

திருவத்திபுரம். வ ஆ.

1946

# வெளியிடுவோர் விளக்கம் :

"ஆடுராட்டே சுழன் றாடுராட்டே", "கத்தியின்றி இரத்தம் இன்றி யுத்தம் ஒன்று வருகுது" என்பன போன்ற பல இன்னிசைப் பாக்களைப் பாடித் தமிழ் நாட்டை விடுதலைப் போரில் தலையிட ஊக்கிய தமிழர், நாமக்கல் கவிஞர் எனும் திரு. வெ ராமலிங்கம் பிள்ளை அவர்கள். அவர் ஓவியப் புலவர்; நூலாசிரியர்; தலைசிறந்த நாட்டுப் பற்றுடைய—சிறை சென்ற வீரர். திரு. பிள்ளையவர்களைத் தமிழ்நாடு நன்கு அறியும். அவர் எழுதிய நூல்களில் பலவற்றை யாம் படித்தின்புற்றோம். ஆனால் கவிஞரின் திறமை யாவும் "காட்டுக்கு எறித்த நிலா"ப் போலத் — தமிழ்நாட்டுக்குப் புதுவை, உயிர்க்கவி பாரதிதாசன் காலஞ்சென்ற கவியரசர் பாரதி முதலியவர்களின் அரிய காவிய-கட்டுரைகள் பயன் உறுத்திய வழியில், பயன்படாமல், - வேறுவழியில் சில காலமாகச் செல்வதைக் காண எம் நெஞ்சு நெகிழ்கிறது. இன எழுச்சியைத் தூண்டாத வேறொரு எழுச்சியில் கவிஞரின் நாவன்மை பெருக்கெடுத்தோடுகிறது; அதனை உணராமல் தமிழ் மக்களில் பெரும்பாலோர் கவிஞரைக் கண்மூடிக் கொண்டு பின்பற்றுகின்றனர்; திரு. கவிஞரின் தவறிய வழியைச் சுட்டிக் காட்டவே இக்கட்டுரை வெளி வருகின்றது. திரு. கவிஞரின் வாதங்களையும் எண்ணங்களையுமே தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தோழர்களில் பெரும்பாலாரும் பின்பற்றி வருவதால், அவர்களும் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின்—சிறப்பாகத் திராவிடர் கழகத்தின் இன்றியமையாமையையும் நோக்கத்தையும் அறிந்து உண்மை நெறியில் உழைக்க இந்நூல் பயன்படும் என்று நம்புகிறோம். தமிழகம் வெறுப்பு விருப்பு இன்றி ஆராய்ந்து பொறுப்புணர்ச்சியுடன் உண்மை நெறி உணர்ந்து ஒழுகுவதாக!

# எங்கள் நன்றி :

"சென்னையில் இருக்கும் போது இதை நான் முழுதும் படித்துப் பார்த்தேன்; இதில் சட்டப்படிக்கான குற்றம் எதுவும் தென்படவில்லை. கடிதம் பார்க்கவும்."

என்று, தம் முதுமைப் பருவத்தின் தளர்ச்சியையும், ஓய்வொழிவற்ற உலக ஊழியத்தின் தொல்லையையும் நோக்காமல் எண்ணிக்கையற்ற இடையூறுகட்கும் வேலைகட்கும் இடையில், திராவிடநாட்டின் தனிப் பெருந் தலைமையால் முனைப்பு மிகாமல், பணிவுடைமையும், இன்சொலும், எவர்க்கும் எளிவந்து இன்னருள் புரியும் தன்மையும் உடைய எந்தல், எங்கள் தலைவர் ஈரோட்டண்ணல் பெரியார். ஈ. வே. ரா அவர்கள், ஏறத்தாழ 100 பக்கங்கள் கொண்டகை எழுத்துப் பிரதியை அமைதியோடும் ஆர்வத்தோடும் படித்து எங்களை ஊக்கியதற்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றியை வணக்கமுடன் தியாகசிகரமான பெரியார் அவர்கட்குத் தெரிவித்துக் கொள்கிறோம்

வைக்கம் வீரரான பெரியார் அவர்கள் 22-8-45ல் தம் கடிதத்தில்; "......ஒரு மூன்றாந்தர மனிதரைப் பார்ப்பனர் செல்வாக்குத் தவிர வேறு எவ்வித செல்வாக்கோ பிரபலமோ இல்லாத ஒரு மனிதரை(ப்பற்றி)நாம் ஒருபெரிய புத்தகம் எழுதுவதன் மூலம் மதிக்கப்படத் தக்க—சிந்திக்கப் படத்தக்க மனிதராக ஆக்குவது சரியா? கடமையா? என்பது எனது தவிப்புக்குக் காரணம்......!!" என்று எழுதியுள்ளமைக்கு நாங்கள் பதில் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறோம்.

தலைவர் பெரியார் அவர்கள் எதிர்ப்புக்கு அஞ்சாத மாவீரர் ஆதலின் தோழர் நாமக்கல்லார் போன்றவர்களைச் சாதாரண மனிதராகக் கருதலாம்; அதுவும் அவர் மறத்தன்மைக்குத் தக்கதேயாம் ஆனால், பாமரமக்களுக்குப் பார்ப்பனியம் செய்து வரும் போதனையும் அதை எடுத்துப் பாட்டில் உரைப்பதற்காகப் பார்ப்பன அடிதாங்கிகளான தமிழர்கள், மை நாமக்கல் கவிஞர்க்குப் பெரும் பொருள் காணிக்கை கொடுத்து ஊக்குவதையும், திராவிடத்தைப் பார்ப்பனியம் விபீஷ்ணர்களான மானங் கெட்ட தமிழர்களைக் கொண்டே அடிமை யாக்குவதையும் குறித்து எண்ணும் போது இதைக் கண்டிக்காமல் விட்டால், "தட்டிக் கேட்க ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப் பிரசண்டனுவதைப்" போல் விபீஷணத் தன்மை வளர்ச்சியடைய இடம் உண்டாகும் என்றஞ்சியே அதைமுளையிலேயே கிள்ளி எறிய இதை வெளியிடுகிறோம்.

அன்றியும் திராவிடர் கழகக் கொள்கைகளைப் பற்றி விளக்கவும், பார்ப்பனியம், திராவிடமக்களை எய்த்த சூழ்ச்சிகளை நன்ருக விளக்கவும், வாய்ப்பு இந்நூலால் கிடைத்தமையும் இதை வெளியிடுதற்குரிய ஒரு காரணமாகும். இதைத் திராவிடத் தோழர்களோடு காங்கிரஸ் திராவிடத் தோழர்களும் முழுமனதுடன் வரவேற்று இதைப் போன்றபல நூல்களைத் திராவிடர் இனஎழுச்சிக்கு உதவியாக வெளியிடும்படி எங்களை ஊக்க வேண்டுகிறோம்.

இதைப் படித்துஎங்களை ஊக்கிய பெரியார் அவர்கட்கும் பிழை திருத்தித் தந்த ஆசிரியர் திரு. தணிகை. உலகநாதன் அவர்கட்கும், அச்சுவேலையில் உதவிய காஞ்சி திரு. சம்பந்தம் அவர்கட்கும், இதைத் தம் சிரமம் கருதாது விரிவாக ஆராய்ந்து எழுதிய தோழர் வித்துவான். மா.வண்ணு அவர்கட்கும், எங்கள் நெஞ்சார்ந்த நன்றியும் வணக்கமும் உரித்தாக்குகிறோம்.

அன்புள்ள,

மா. பா. இராசமாணிக்கம்

## பதிப்பகம் பகர்வது :

"பதிப்பகம் என்றொரு பாசறையைப்
படைத்(து)உயர் திராவிடப் போராட்டக்
கொதிப்பினில் திராவிடக் குலம்வெற்றி
கொ(ள்)ளும் நெறி - யிற்பல படைநூல்கள்
மதிப்புற வெளியிடு வோம்; இவற்றை
வாங்கிநம் போரினில் வெற்றி கொள்வீர்
விதிப்பொருள் எதற்கும் அஞ்சா(து) அமர்செய்
வீரமார் திராவிட நாட்டன்பீர்!"

## நூலாசிரியரின் நோக்கம் :

---

"கவிஞன் குரல்" என்ற கண்கவர் நூலைச் சென்ற ஆண்டில் படித்துப் பார்த்தோம். கவிஞரின் கருத்துக்களில் சில பல உண்மை நிகழ்ச்சிக்கு மாருக ஊறு விளைப்பதாய் இருத்தல் அறிந்து இரங்கினேம்! பின்னர் சில காங்கிரஸ் தோழர்கள் கவிஞரின் கட்டுரைகளில் ஒன்ருன "பிராம்மணர் பிராம்மணரல்லாதார்" என்ற சொற் போர்க்கிடமான கட்டுரையைக் காட்டிப் பார்ப்பனரல்லா தார் இயக்கத்துக்கு உரிய நோக்கம் வீண் என்றும் அவர்கள் கூச்சல் தந்நலமானதென்றும் சாற்றி நகையாடினர். அவர் தம் அறியாமை என்னே! புகழ்பெற்ற ஒருவர் புகன்று விட்டதனலேயே உண்மை இன்மையாய் விடாது. உண்மையில் கவிஞரின் அறிவுக்கு ஒவ் வாத-நொண்டிக் காரணங்களையும் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின் இன்றியமையாமையையும் அதன் உண்மைகளையும் உணர்ந்து இனியேனும் "காங்கிரஸ்" தோழர்களும் திராவிட நாட்டுப் பிரி வினைப் போரில் கலந்து தொண்டாற்ற முயல வேண்டும் என்றே இதனை எழுதினேம்!

உண்மையான கவிஞன், உலகமே திரண்டு எதிர்த்தாலும் உண்மையை உரைக்கப் பின் வாங்கான்; அவனைப் பொருளோ புகழோ-இன்பத் தேவையோ வெல்லா; தன்னறிவில் நேரிது என மின்னிய ஒவ்வோர் எண்ணத்தையும் கவிஞன், அழகாகக் கூறி ஆயிரமாயிரம் மக்களுக்கு அறிவூட்டி முன்னேற்றிவிடுவான்; அவ் வாறு கூறியதன் விளைவாய்த் தன்னுயிர்க்கே இடையூறு நேர்வதா யிருப்பினும்! அவன் தன் நினைவு சரியானது என்பதை நிலை நாட்டக் கூறும் காரணங்களில் உள்ள ஓர் எழுத்தைக் கூட எவரும் மறுத்து விட முடியாது. கவிஞன் 'பிரம்மா'வினும் ஆற்றல் வாய்ந்த

வன்! அவன் விருப்பு வெறுப்பின்றிக் கவிதைக் கண்களால் உள்ளும் புறமும் தேடி ஒவ்வொரு பொருளின் இயல்பையும் கண்டு அதனைச் சமுதாய முன்னேற்றத்திற்கு இயையக் கூறும் அருளாழி அந்தணன். இத்தகைய கவிஞர்கள் கடவுள்-மதம்-அரசு என்ற மும் மலத்தையும் உடைத்தெறிந்து சீர்தளை முதலிய செய்யுட் கட்டுப்பாட்டையும் தம் விருப்பம் போல மாற்றியமைத்துக் கொண்டு அவ்வக் காலங்களில் உலக மக்களை உண்மை நெறியில் ஊக்கிச் செலுத்தும் அறிவாளிகள்! 'புலவர்' 'கவிதை' என்ற சொற்கட்கு இவர்களும், இவர்கள் சொற்களுமே உண்மையான விளக்கங்களாகும்!

மற்று, கொத்தன் வீட்டைக் கட்டக் கற்களை இடத்திற்கேற்ப உடைத்தும் தேய்த்தும் சமைப்பது போல, பாட்டை யாப்பணிகட்கு இயையவும் ஒருசில தன்னல மேன்மைக்காகவும் கருதி அகராதித்துணையால் சொற்களை அடுக்கியும், பொய்யை மெய்யாகப் புனைந்து மயக்கியும் பாடும் நாவலரும் பாவலரும் உண்மைக் கவிஞர் ஆகார். இப்போலிக் கவிஞரால் என்றும் நாடும் முன்னேறாது! இவர்களே கலைக்கு உறுதி கம்பன் சொல் என்று தமிழர் தலைக்கு இறுதி தேடும் ஐந்தாம் பட்டாள அறிவாளராவர்!

அன்பர்களே, நெஞ்சில் இவ்வுண்மையை நிறுத்திக் கொண்டு, இனிக் கவிஞரின் குரலையும் எம் சிற்றுரையையும் கேட்டும் கற்றும் நடுநிலைமையிலிருந்து முடிவை நீங்களே கூறுங்கள்! கவிஞரின் நாவன்மையை - இல்லை - கைவரிசையை. உள்ளபடியே கணிக்கத் தக்கவர்கள் கற்றலும் கேட்டலும் வல்ல பெரியோராகிய நீங்களே அன்றோ?

இதைப் பதிப்பித்த தோழர்க்கு எம் நெஞ்சார்ந்த நன்றி. "வாழ்க இறைமணி" என்றவர்க்கு வாழ்த்துரைக்கிறோம்!

# நாமக்கல் கவிஞர் நாவன்மை!

## திரை மறைவில்:—

[பல்லவ வேந்தன் ராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட மண்டலாதிபதி நரசிம்ம பல்லவ மகாராஜன் வைரங்கள் இழைத்த அரச பீடத்தில் அமைச்சர் முதலிய அரசவையோர் சூழச் சூழ்ச்சி மந்திரத்தில் அமர்ந்திருக்கிறான். எதிரில் ஒரு பெயர் பெற்ற பாண்டிய நாட்டுக் கலைஞர் கோப் பெரியார் அமர்ந்திருக்கிறார் சற்றுத் தாழ்ந்த இருக்கையில்]

பல்லவ வேந்தன்:— புகழ்பெற்ற தமிழ்க்கலைஞரே, உம்மைப் போன்ற அறிஞர்களால் தான் உலகம் உருள்கிறது. அன்புகூர்ந்து நீங்கள் உங்கள் நாட்டு மக்களுக்கு எங்களால் தீங்கு நேராது என்பதோடு பல நன்மையும் விளையும் என்று எடுத்துரைத்து, அவர்கள் எங்கள் மேல் கொண்டிருக்கும் வெறுப்பை நீக்கி விருப்பம் கொள்ள ஊக்குவீரேல் உங்களுக்கு வேண்டிய அளவு பொன்னும் நிலமும் பட்டமும் தந்து சிறப்பிப்பதுடன் உங்கள் நன்றியை என்றும் மறக்கமாட்டோம். அதற்கு அச்சாரமாக இதோ இப்போதே உங்களுக்கு "கலாநிதி" என்ற பட்டமும் கோடி பொன்னும் 125 சிற்றூர்களின் உரிமையும் தருவதாய் உறுதிகூறிய செப்பேடு வாங்கிக் கொள்ளுங்கள்.

தமிழ்க் கலைஞர் :— அரசர் ஏறே; பொறுத்தருள வேண்டும். என் நாட்டு மக்கள் என்னை நம்பியுள்ளனர்; மதிக்

கின்றனர்; தாங்களோ, வாணிகம் செய்ய உரிமை பெற்று வந்து "இடம் கொடுத்தால் மடம் பிடுங்கும்" என்பதுபோல இன்று தமிழ் நாட்டையே தங்களாட்சியின் கீழ்க் கொண்டு வந்திருக்கின்றீர்கள். எப்படி தங்களை நம்புவது? தமிழ்நாட்டின் உரிமையை எங்களிடம் மீண்டும் கொடுத்து விடுங்கள்; பிறகு எல்லாத் தமிழரும் தங்களை வெறுக்காமல் போற்றுவார்கள்.

அரசர்:- அப்படியல்ல அன்பரே; எங்களுக்கு உங்கள் நாட்டை உண்மையிலேயே ஆளவேண்டும் என்ற விருப்பம் முக்காலும் இல்லை; நாம் இப்போது அதை ஆட்சிபுரிவதெல்லாம் உங்கள் நன்மைக்குத்தான்! தமிழ்மக்கள் சேர சோழ பாண்டியர் முதலிய முப்பெரும் பிரிவுடன் எண்ணற்ற சிற்றரசராயும் பிரிந்து நின்று உங்களுக்குள் போரிட்டு நாட்டைக் கேவலமாக்கி மடிவதைக் காண எங்களுக்குப் பொறுக்க முடியவில்லை. உங்கள் மேல் எமக்குள்ள இரக்கத்தால்தான் நீங்கள் எல்லோரும் ஒன்றுபடும் வரையில் நாம் இங்கிருப்போம்! பலப்பல நன்மைகளைச் செய்திருக்கிறோம்; இனியும் செய்வோம்! அதனால் நீங்கள் யாம் கோரும் உதவியைச் செய்வதாக வாக்களியுங்கள்.

கலைஞர்:- இல்லா விட்டால்.... .... ....

அரசர்:- (சற்றுக் கோபமாக) இல்லாவிட்டால் தமிழ் நாட்டின் நலத்தைக் கெடுக்கும் உங்களை எம் கைவாளுக்கு இரையாக்கி விட்டு வேறு ஒரு பெரியவரைக் கொண்டு எம் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வோம்; அன்றியும் எம்மை அவமதித்த "ராஜத் துவேஷ" குற்றத்துக்காக உம் குடியையும் கெடுத்து விடுவோம்!

கலைஞர்:- அது நீதி வாய்ந்த அரசர்க்கு நேர்மையோ?

அரசர்:- (கோபமாக) நெல் விளைவுக்காகப் புல்லைப் பிடுங்கிஎறிவது குற்றமா? உங்கள் நூலில் 'கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று' என்று எழுதி இருக்கிறதாமே. நாட்டு முன்னேற்றத்தைத் தடை செய்யும் நாச காலனும் கள்வனும் ஒன்றுதான்.

கலைஞர்:- (அஞ்சியவராய்ச் சிறிதுநேரம் எண்ணிப் பார்த்து விட்டு) வேந்தர் வேந்தே. நீங்கள் சொல்வதும் சரிதான்; தன்னாட்சியை விரும்பித் தமிழர்களைத் தங்கள் காலடியில் பலியிட்டு நமக்குள் விரோதமும் குரோதமும் வளர்ப்பதை விடத் தமிழர் ஆளும் தகுதிக்கு வரும்வரை—ஏன்-தங்கள் ஆட்சியையேகூட என்றென்றும் மதித் தொழுகி அமைதியாக வாழ்வது மேல்தான்! ஆனால் நான் மக்களின் விருப்பத்துக்கு மாறாகப் பேசினால் என்னை அவர்கள் மதிக் காமல் இடர் செய்யவும் கூடுமே என்றுதான் அஞ்சுகிறேன்!

அரசர்:- அதைப் பற்றிய கவலை உமக்கேன்? பாமர மக்கள் மைஒற்றும் தாள் போன்றவர்! உங்கள் சொல்லைக் கட்டாயம் ஏற்பார்கள். மறுத்து இடர் செய்யாது இருக்கப் பாதுகாவலாக ஒரு பெரும் படையை உமக்குத் துணையாக வும், உம் பிரசாரத்துக்குரிய எல்லாவற்றையும் ஏற்பாடு செய் வோம். உமக்கு நிறைய பொன்னும் மணியும் நிலமும் இன் னும் வழங்குவோம்! "உலகம் விரைந்து தொழில் கேட்டு ஏவல் புரியும்; நல்ல நிறைந்த அறிவுமிக்க சொற்பொழிவாளராயின்" என்று உங்கள் திருக்குறள் கூறுகிறதே; நீங்கள் நல்ல சொற் பொழிவாற்றிப் பேர் பெற்றுள்ளீர்; உங்களுக்குப் 'பிரசங்க பானு' என்ற பட்டமும் வழங்குகிறேன். ஆகட்டும் உம் வேலை! [கலைஞர் மகிழ்ச்சியுடன் வெளியேறுகிறார்]

## திரைக்கு வெளியில்:

[ஆயிரக் கணக்கான மக்கள் பல்லவ சாம்ராஜ்யத்தை ஒழிக்கும் ஆர்வத்தோடு எவ்வகைத் தியாகமும் செய்யத் தயாராய்த் தமிழ் முழக்கம் வானைக்கிழிக்கக் கூவிக்கொண்டு செல்கின்றனர். அவர்கள் எதிரில் நமது கலைஞர் கோப் பெரியார் வருகிறார்; "கோப் பெரியார் வெல்க; கலைஞர் வாழ்க!" என்ற பேரொலி திக்கெட்டும் எட்டிச் செவிடுபடச் செய்கிறது. கூட்டத்தை அமைதியாக அமரச்செய்து பிரசங்கபானு, கலாநிதி, கவிஞர் விரிவுரையாற்றுகிறார். மக்கள் மெய்ம்மறந்து தலையாட்டுவதும் கைதட்டுவதுமாய் அவர் சொற் பெருக்கைச் சுவைத்து ஆரவாரிக்கின்றனர்.]

கலைஞர்:- என்னோடு பிறந்த இனிய தோழர்களே, நான் சொல்வதை நீங்கள் மனக் கொதிப்பின்றி அமைதியாய்க் கேளுங்கள்: உங்கள் நலமே என் வாழ்வின் குறிக்கோள் என்று நீங்கள் அறிவீர்கள்! என் சொற்கள் ஆழ்ந்த ஆராய்ச்சியின் பயனாய் இன்று வெளிவருகின்றன. அவற்றை நீங்கள் மதிப் பீர்கள் என்ற நம்பிக்கை உண்டு. நாம் தமிழ்நாட்டில் பல்லவ ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்வது என்னறிவுக்குச்சரி யென்று தெரியவில்லை. எழுத்தறிவு குறைந்த நம்மில் பலர் நான் சொல்வதின் பொருள் தெரியாமல் திகைப்பார்கள்! நான் இப்படிக் கூறுவதற்கு அவர்கள் என்னை வெறுத்தாலும், நோயாளி முணுமுணுப்பதற்காக நோயாளியைக் காயாமல், அவன் தந்தையும் மருத்துவனும் அவனுக்கு எப்படி மருந்து கொடுத்துக் குணம் செய்வார்களோ அப்படியே நானும் உங்கள் நலமே கருதிக் கூறுகிறேன். பல்லவர்கள் நம்நாட்டு ஆட்சியைக் கைக்கொண்டார்கள். நம்மிடையே உள்ள பிரி வைப் போக்கி ஒற்றுமை ஏற்படுத்தவே அப்படி நாட்டைப் பிடித்தனர்! பல்லவரால் எத்தனை கோயில் உண்டாயின!

சிற்பக்கலை வளர்ந்தது. வட மொழிக் கல்லூரி எத்தனை!........ .... இன்னும் பல நன்மைகள் எய்தியுள்ளோம்! இவ்வளவு நன்மை செய்தவரை நாம் விரோதிப்பது நன்றிகெட்ட கழுவாய் இல்லாத பெரும் பழி. யாகும் .... .... .... ....

இது மட்டுமா! சுதந்தர உரிமை-தமிழர் நலம் என்று வீண் பேச்சால் நாம் இதுவரை கண்டது என்ன? கொலையுண்டனர் ஆயிரக்கணக்கில் தமிழர்! இரத்தாறு! நினைத்தாலும் கண்ணீர் வருகிறது! இந்த வரட்டுப் போராலும் புரட்டுப் பேச்சாலும் இருட்டுக்கு முன்னேற்றமே அன்றி என்ன நன்மை? இதை விட நாம் அமைதியாக இருந்து பல்லவர் செய்யும் நன்மைகளையும் பெற்று மனைவி மக்களோடு இன்பமாக வாழ்வது எவ்வளவு மேலானது; எண்ணிப் பாருங்கள். புரட்சி என்பவன் கொடியவன்; சுதந்திரப் போர் என்பவன் மக்களிடம் அன்பற்றவன்; .... .... .... .... ஆகையினால் தோழர்களே, உங்களில் ஒருவனான என் பேச்சில் நம்பிக்கை வைத்துச் சுதந்தரப் போராட்டத்தை நிறுத்திவிட்டுப் பல்லவ மகாராஜரின் புகழை இனிப்பாடுவோம்! தமிழர்களாகிய நாம் அழிவு வேலையை விட்டு ஆக்க வேலையில் இன்பம் தேடுவோம்!

.... .... .... .... கூட்டத்திலே பலர் கைதட்டி ஊக்குகின்றனர்.

.... .... .... ....

மேலே தீட்டியுள்ள காட்சி கற்பனைதான்! கற்பனைகள் பொய்யாய் இருப்பினும் அவை என்றும் அழியாத ஒரு உண்மையை உரைப்பனவாகும்; இக் காட்சியில் பல்லவர்க்குப் பதிலாக மேநாட்டரசரையும் கலைஞர்க்குப் பதில் ஆரியமகாத்மாவையும் தமிழர்க்குப் பதில் இந்தியரையும் வைத்துக்கொண்டு படித்தாலும் சரி-அல்லது பார்ப்பனிய அரசர் மனு பரம்பரை

யையும், மானங்கெட்ட தமிழ்க்கவிஞர் கம்பன் பரம்பரையும், பார்ப்பனரல்லாத திராவிடரையும் முறையே வைத்துக் கொண்டு கற்றாலும் சரி – கற்பனையின் உண்மை மாறாது! ஏய்க்கும் படித்த கூட்டம் ஒன்று—ஏய்க்கப்படும் ஏழைமக்கள் கூட்டம் ஒன்று—இவ்விரு கூட்டத்தையும் சேர்த்து ஆணவத் தோடு ஆளும் சூழ்சிவல்ல குள்ளநரிக் கூட்டம் ஒன்று. இம் மூன்று கூட்டமும் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு காலங் களிலும் உண்டு; அக்கூட்டத்தார் பெயர் மட்டும் மாறிக் கொண்டிருக்குமே தவிர நிலையும் நோக்கமும் நிலையாகவே இது வரை இருந்து வருகின்றன.

அறிஞர் உலகம் ஏய்க்கப்படும் கூட்டத்தை, ஏய்க்கும் ஏனைய இரு கூட்டத்தாரின் கொடிய விலங்கினின்றும்-- (விபீஷண—அநும—கம்பாழ்வார் நின்றும், ஆரிய ராமராஜ யத்தின் நின்றும்) விடுதலை செய்ய அரும்பாடுபட்டு வருகிறது. இம்முயற்சியில் ரஷியாவைத் தவிர்த்து மற்ற நாடுகளில் தோல்வியே நூற்றுக்கும் தொண்ணூறு பங்கு எய்தியுள்ளது அறிஞருலகு!

பகுத்தறிவு சிறிதேனும் உள்ள எவனும் ஒரே ஒரு காலத்தில் ஆளும் இனத்தைச் சிறிது நம்பினாலும், காட்டிக் கொடுக்கும் ரஸ்புடீன் கூட்டத்தை ஒரு போழ்தும் நம்புவது மில்லை; போற்றுவதுமில்லை; உலகில் எதிர்பார்த்த அளவுக்கும் மேலான துன்பக் குழிகள் உண்டானதன் காரணமே இந்த ஜூடாஸ் கூட்டந்தான்! விபீஷண வீணர் குலத்தை வேரோடு சாய்த்து வீழ்த்தாதவரை உத்தமமான ஓர் உயர்ந்த உலகம் எந்த இயலிலும் உண்டாகப் போவதில்லை! மதில்மேல் பூனைபோல் இருந்து வெளவால் போல் காலத்துக்கு ஏற்ற கோலம் பூண்டு வாழும் தரகர் கூட்டம், நொடிக்கு மளவில்

ஆளும் இனத்தையும் சுரண்டப்படும் இனத்தையும் ஏய்த்து விடும் வல்லமை யுடையது. இவ்வளவு வல்லமையுடைய தாயினும் பகுத்தறிவு உலகம் அவ்வீணரின் வாதத்தை நம்பாமல் வேரற்ற மரம்போலாக்கி விடும்! ஆனால் பாமர உலகமோ? விரைவில் புரோகிதக் கூட்டத்தின் பொருட்பெட்டியாக மாறி விடுகிறார்கள்! அன்பர்களே, மேற்கூறியவற்றை நினைவில் இருத்திக் கொண்டு கீழ்வரும் வாதத்தைப் படியுங்கள்!

.... .... .... ....

**கவிஞர் கதைக்கிறார்:—**

"தேச பக்தர்களே, நமது தமிழ் நாட்டில் பிராம்மணர் பிராம்மணரல்லாதார் என்ற மனஸ்தாபம் நாளுக்குநாள் அதிகப்பட்டு வருகின்றது. அது பாமர மக்கட்கு ஒரு தப்பான வழியைக் காட்டி, பண்டிதர்களையும் கலக்கிப் பொதுஜன சேவையில் ஈடுபட்டிருக்கிற பிராம்மணர்களையும் பிராம்மண ரல்லாதாரையும் மிகவும் வருத்தப் படுத்தி வருகின்றது. இந்தக் கலக்கத்தைத் தெளிய வைத்தால் தான் தமிழ் நாட்டில் எந்த விதமான பொதுஜன ஊழியமும் சரிவர நடக்கும்!"

கவிஞர் கட்டுரையிலிருந்து மூன்று உண்மைகள் தெளிவாகின்றன.

1. பிராம்மணரல்லார் இயக்கம் நாள் தோறும் வளர்ந்து வருவது. 2. அவ்வளர்ச்சி பண்டிதர் முதல் பாமரர் வரைக்கும் உள்ள பொது மக்கட்கு ஒரு கலக்கம்—வருத்தம் தருவது. 3. இக்கலக்கத்தைத் தெளிய வைக்காத முன் எந்த அரசியல் செயலும் இனித் தமிழ் நாட்டில் வெற்றி பெறாது.

காந்திய பக்தக் கவிஞர் சிகாமணியே நம் திராவிடர் கழகத் (பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின் இன்றைய பெயர்) தின் உழைப்பும் முயற்சியும் வீணாகப் போகவில்லை எனச் சான்று கூறுகிறார். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியாதல்லவா? ஆனால் கவிஞர் மறைக்க முயல்கிறார். பார்ப்பனரின் அட்டூழியம் நாட்டில் உள்ளவரை அப் பார்ப்பனீயத்தை வீழ்த்த பார்ப்பனரல்லாத திராவிடர் கழகமும் இருக்கும்; அன்றியும் வெவ்வேறு கொள்கையுடைய பிறப் பகைமையுடைய இவ்வியக்கங்கட்கிடையே மனவருத்தம் வளர்ந்தே வரும். அது இயற்கையே! தொழிலாளி எந்நாளிலும் ஒன்றுபட முடியாது. முதலாளி ஒழிந்துபோன பிறகும் தொழிலாளி இனம் இருக்கும். அதுபோல பார்ப்பன இயக்கம் பாழான பிறகும் பார்ப்பனரல்லாதார் நலம் பேணித் திராவிடர் கழகம் வளர்ந்தே வரும். அது அழிக்க முடியாத நாட்டுக்கு இன்றியமையாத ஒரு இயக்கமாகும்! அவ்வியக்கம் பாமரர்க்குத்தவறான வழியைக் காட்ட வில்லை. வாலிழந்த நரி பிற நரிகளைக் கேலி செய்வதைப்போல, தவறிய வழியில் சென்றுவிட்ட கவிஞர் நம்மைக் குறை கூறுகிறார். காண்பதெல்லாம் தொழிலாளி செய்தான்; அவன் காணத் தகுந்ததும் வறுமையாம்—பூணத்தகுந்ததும் பொறுமையாம் எனின் சுரண்டப் பட்ட தொழிலாளி தன் பிறப்புரிமைகளைப் பெறக்கிளியை விடுத்துக் கிளர்ந்தெழுந்து கெஞ்சும் உத்தேசமின்றி உரிமைகளைக் கேட்டு நீதிவாதம் கூறுவது முதலாளி கண்ணுக்கும், அவன் அருளால் வாழும் பண்டித கூட்டத்துக்குமே முறையே தவறாகவும், கலக்கமும் வருத்தமும் தருவதாகவும் தோன்றக் கூடும். ஆனால் தொழிலாளியின் வாதமே நேர்மை யுடையது என்பதைப் பகுத்தறிவுலகம் ஒத்துக் கொள்ளும், அதுபோலவே, பார்ப்பனரல்லாதார் நலம் கருதி

உழைக்கும் "திராவிடர் கழகம் தவறான வழியில் சென்று கலக்கத்தை உண்டு பண்ணுகிறது" என்று நாக்கில் நரம் பின்றிப் பேசும் நாமக்கல் கவிஞரின் நாவன்மையையும் அறிஞர் அளந்து உண்மையை உணர்வர்! பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும். எனவே பார்ப்பனர் கூறும் வருணாசிரம தருமமும் இந்து மதமும் எங்கட்கு வேண்டாம்; எங்களுக் குத் திராவிட மதமே மேல் என்று கூறித் திராவிட நாட் டைத் திராவிடரே பெற்று ஆளும் நெறியில் உழைப்பது தவறாகுமா? அடிமைகள், விடுதலை வேண்டிக் கிளர்ச்சி செய் வதைத் தவறு என்பவன் உண்மைக் கவிஞனாக மாட்டான்!

கவிஞர் கூறுவதுபோல, திராவிட நாட்டைப் பொறுத்த வரையில் ஆரிய திராவிடப் போராட்டத்தைக் கிளறுக்கிறை என்றெண்ணிப் பெறும் உரிமை வேவல் திட்டமட்டுமல்ல; முழு உரிமை உடைய தன்னாட்சியே என்றாலும், அவ்வாட்சி செவ்வனே நடைபெறப் போவதில்லை என்பது உறுதியாகும். தொழிலாளியின் நீதிக்கு ஒத்த நேர்மை வாதத்தை உணர்ந்து அவனுக்கு உரிய உரிமைகளைத் தந்து அமைதி செய்தால் ஒழியத் தொழிலாளி முதலாளி போராட்டம் அடங்காது; நாட்டில் எந்தத் தொழிலும் நடைபெறாது என்ற உண்மை யையே கவிஞர், குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண் டதுபோல, திராவிட ஆரியப் போராட்டம் வீண் எனக் கூற வந்தவர், மெய்யைப் பொய் வெல்லாது என்பதற் கொப்பப் பார்ப்பனரல்லாத இயக்கத்தின் இன்றியமையாமையையும் உண்மையையும் தம்மை மறந்தோ அறியாமலோ விளக்கிக் கூறியிருப்பதற்கு நாம் அவர்க்கு நன்றி கூறுகிறோம்!

"இந்தப் பிராமண-பிராமணரல்லாத சச்சரவிற்குப் பிராமணர்களுடைய குற்றங் குறைகள் எவையானாலும்

அவற்றைப்பற்றிப்பேசபிராம்மணர்களுக்குள்ளேயே பலபேர் இருக்கின்றார்கள்" என்கிறார் கவிஞர்! உண்மையில் யா மறிந்தவரை பார்ப்பனன் குற்றத்தைக் கூறும் பார்ப்பனர் வ. ரா. வைப்போல் ஆயிரத்தில் ஒன்றிரண்டு பேரே உள்ள னர்; அவர்களையும் பார்ப்பன உலகம் புறக்கணித்து (ஜாதிப் பிரஷ்டம் செய்து) இருக்கிறது. எடுத்துக் காட்டாக, பார்ப் பனரின் கெட்ட வழக்கங்களை கண்டித்த கவி. சுப்பிரமணிய பாரதியின் நிலையை நாடறிந்திருக்கிறது. அப்படி அவர்களில் சிலர் பேச முன் வரினும் அதிலேயும் ஒரு சூழ்ச்சி இருக் கிறது. பார்ப்பனீயத்தை மக்கள் வெறுக்காதிருக்கப் பார்ப் பன சமூகக் குறைகளைப் பார்ப்பனனே பகரும் சூழ்ச்சியே அது! முஸ்லீம்களுக்கும் தாழ்த்தப்பட்டவர்க்கும் பாடுபடு வதாகக் கூறிக்கொண்டு தன் மகன் ஹிராலால் காந்தி முஸ்லீம் மதத்தைத் தழுவியபோது அதைக் கண்டித்தும், ஆறு கோடி மக்களை ஹரிஜனங்களாகத் தாழ்த்தி வேறு பெயரால் அழைத்தும் வாழ்கிற காந்தியடிகளின் நீதி நேர்மையைப் போலவே, பார்ப்பனீயத்தைக் கண்டிக்கும் பார்ப்பனனின் நீதியுணர்ச்சியும் பார்ப்பன சமுதாயத்துக்கே நலம் பயப்பதாய் இருக்கும். இதற்கு எடுத்துக் காட்டுகளாகத் தன் மகளை வைசிய ஜாதியைச் சேர்ந்த திரு. காந்தி மகனார் தேவதாஸ் காந்திக்குக் கொடுத்து வெளிப்படையாக ஜாதியா சாரங்களை நீக்கிவிட்டவர்போல் ஒழுகினாலும், பூணூலையும் ஆச்சாரியார்பட்டத்தையும் நீக்காத திரு. C. ராஜகோபாலாச் சாரியையும், சோஷியலிசமே நாட்டுக்கு நல்லது எனப்பேசி யும் சத்தியம், கடவுள் முதலியவற்றில் நம்பிக்கையிழந்திருந் தும் தன் தந்தை மோதிலால் நேருவின் திதி முதலிய சடங்கு களை வேதவிதிப்படிச் செய்து பச்சைப் பார்ப்பனனாக நடந்து கொண்ட ஜவஹர்லால் நேருவையும் கூறலாம்.

எந்த இனமும் தன் குற்றத்தை விரைவில் ஒத்துக் கொள்ளாது; தன் குற்றத்தையும் கண்டுகொள்ளாது. ஏதிலார் போலத் தம் குற்றம் காணும் திறம் ஒவ்வொருவரிடமும் இருந்தால் மன்னுயிர்க்குத் தீதில்லை என்றே வள்ளுவர் கூறுகிறார்; ஆனால் முதுகைப்பார்க்க வேண்டுமானால் இரண்டு கண்ணாடியும், முகத்தைப்பார்க்க ஒரு கண்ணாடியும், எவனுக்கும் வேண்டியிருக்கும்போது, பார்ப்பனீயத்தின் குற்றத்தைப் பார்ப்பனர் உணரவும் முடியுமோ? உணர்ந்தாலும் அதைப்பற்றிப் பேசாமல் தம் நலத்திலேயே நாட்டமாயிருப்பர். கள்ளர்கள் தங்கள் தொழில் தவறானது எனப்பேசுவார்களா? அப்படிப்பேசினால் அவர்கள் ஊர்ப் பணத்தைக் கொள்ளையடித்து ஒய்யாரமாக வாழ முடியுமா? திருடன் தவற்றை அறிந்து அவர்களின்றும் பொதுமக்களைப் பாதுகாத்துத் திருடர் கூட்டத்தையும் திருத்துவது அரசாங்கம் ஆவதுபோலத் திராவிடர் கழகம் உழைத்து வருகின்றது; ஆரிய திராவிடராகிய இரு சமுதாயத்தின் நலத்துக்கும் சோத்து!

பிறகு கவிஞர் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தையாவது, அதன் தலைவர்களையாவது தான் அவமதிக்கவேண்டும் என்பது தன்னுசையல்ல என்றும், திராவிடர் கழகத்தின் நோக்கத்தைத் தான் ஆதரிப்பதாகவும், தான் அவர்கள் (பார்ப்பனரல்லாதார்) அபிப்பிராயபேதங்களை 'மதிப்பதாகவும் கூறிவிட்டு,' பார்ப்பனரல்லாதார் செய்துவரும் மிகவும் தவறான பிரசாரத்தை—"பிராமணர்கள் எல்லோரும் சூழ்ச்சிக்காரர்கள்" என்றும், "சூதுக்காரர்கள்" என்றும், "பிறஜாதியாரைக் கெடுத்தே ஜீவனம் செய்யும் பித்தலாட்டக்காரர்கள்" என்றும் செய்யப்படும் ஒரு பிரசாரத்தை—அதற்கென்று நடத்தப் படும், தமிழ் மொழியை அசுத்தப் படுத்திவரும் பத்திரிகை

களையும், அவற்றை யாதரிக்கும் தலைவர்கள் பிரயோகிக்கும் கொச்சையான மிலேச்சப் பிரசாரத்தைத் தடுக்க வேண்டியே தன் மனம் நாணித் தலைகுனிந்து, "பார்ப்பனரல்லாதாருக்கே பெரும் பிழை புரியும் அப்பிரசங்கத்தை" எதிர்த்து இதனை எழுதவேண்டியது பார்ப்பனரல்லாத தன்னுடைய கடமை என்றும், கவிஞர் சரமாரியாகத் தாள் கிடைத்துவிட்ட காரணத்தால் வரைந்து தள்ளியிருக்கிறார்!

தோழர்களே, "தன்னைச் சொன்னால் வருத்தத்தைத் தரும் வார்த்தைகளையே" திராவிடர் கழகம் பிறர் (பார்ப்பனர்) மேல் சொல்வதாகக் கூறும் இக்கவிஞரின் சொற்களைப் படித்துப்பாருங்கள்! யாருடைய சொற்கள் அப்படிப்பட்டவை? என்பதையும், யாருடைய "மிலேச்சப் பிரசாரம்" பார்ப்பனரல்லாதாருக்கே பெரும் பிழை தருவது என்பதையும் நீங்களே எண்ணிப்பாருங்கள்! இனி நாமக்கல்லாரின் நாவன்மை மிக்க நற்றமிழ் வாதத்தைச் சற்று ஆராய்வோம்.

இனி, "பிராம்மணர்கள் எல்லோரும் சூழ்ச்சிக்காரர்கள் என்றும், சூதுக்காரர்கள் என்றும், பிறஜாதியாரைக் கெடுத்தே ஜீவனம் செய்யும் பித்தலாட்டக்காரர்கள் என்றும் செய்யப் படும் ஒரு பிரசாரத்தை என்னவென்று சொல்வது?............ அப்படி ஒரு சமூகத்தை ஏசோபித்து அவமதிப்பது அன்பல்ல; அழகல்ல; ஆண்மையும் ஆகாது;..........." என்று கவிஞர் கதறுகிறார்!

நாம் கவிஞரைக் கேட்கிறோம்; பார்ப்பனர் சூழ்ச்சிக் காரர் அல்லவானால், பிறப்பொத்த மக்களை ஏன் பிறப்பினால் உயர்வு தாழ்வும் கூறிப் பிரம்மா முகத்திலிருந்து பிறந்தவன் பிராம்மணன் என்றும், காலிற் பிறந்தவன் கடை ஜாதியாகிய

சூத்திரன் என்றும், இன்றுங்கூட அழைத்து வருவதும் அன்றி, ஒரு குலத்துக்கு ஒரு நீதி வகுத்துரைக்கும் மனு நீதி முதலிய ஆரிய நூல்களை உண்டாக்கினர்? ஆரியர்கள் சூழ்ச்சிக்காரர்கள் அல்லவானால், நமக்குத் தெரியாத பொருள் புரியாத வடமொழி மந்திரங்களையே ஏன் கோயில் முதல் மணவிழா, கருமாந்திரம் வரையும் கையாண்டு திராவிடரை ஏய்த்து, மோக்ஷ லோகத்துக்குச் சீட்டுத் தருவதாய் மோசமாக மொழிந்து முன்வரவேண்டும்?

பிராம்மணர்கள் சூதுக்காரர்கள் அல்லவானால், எல்லோர்க்கும் பொதுவாகிய கடவுள் வழிபாடு ஆற்றுவது முதற்கொண்டு இறந்துபோன நம் மூதாதையர்க்குச் செய்யும் திதி வரையில் உள்ள பல துறையிலும், பார்ப்பனரே பெரும் பொருளைக் காணிக்கையாகப் பெற்று ஏற்றமுற்று முதல் ஜாதிக்காரராயிருக்க, ஆண்டவனுக்குக் கோயில் எழுப்பிப் புராணம் பாடிய வீரத் தமிழ்ப் புலவர்கள் முதல் வீரமில்லாத, படிப்பில்லாத பாமரத் திராவிடன்வரையுள்ள நாம், பார்ப்பனர் காலில் விழுந்து அவர்களுக்கு நம் உழைப்பின் பலனைக் கொடுத்து அவர்களை உண்டு கொழுக்கவிட்டுத் தேரடியில் நின்று தெரிசனம் காணுமல் தியங்கிக் கால்வயிற்றுக் கஞ்சிக்கும் கடவுளை நோக்கி ஏன் கதறி நிற்கிறோம்? உழைக்கும் திராவிட மக்கள் ஓட்டாண்டிகளாய் ஒண்ட வீடின்றி உண்ண உணவின்றி உடுக்க உடையின்றிப் பட்டினியால் வாடிநிற்க ஒரு வேலையும் செய்யாமல் கிழிந்த பஞ்சாங்கமும் உலர்ந்த தருப்பையும் கொண்டு ஊரை ஏய்க்கும் பார்ப்பனர்கள் ஒய்யாரமாக மாட மாளிகையில் அறுசுவை உண்டி அமர்ந்து இல்லாள் ஊட்ட மறுசிகை நீக்கி மகிழ்ந்துண்டு, பஞ்சகச்சம் வைத்துப் பட்டு வேஷ்டி புனைந்து மனமார உலக இன்பங்களை முற்றும் அநுபவிக்கக் காரணம் என்ன?

ஆரியர்கள் பித்தலாட்டக்காரர்கள் அல்லவானால் தமிழ் நாட்டில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் கடவுள் திருவிளையாடல்கள் ஒவ்வொன்றுக்கும், அக்கதைகள் பொய்யும்புனைந்துரையுமே யானாலும் மூல ஆதாரம் எப்படித் தமிழில் இல்லாமல் ஹாலாஸ்யமான்மியம், சூதசங்கிதை, ஸ்காந்தம், முதலிய வடமொழி நூல்களில் தோன்றிற்று? பூதேவர், பூசுரர், என்றும் சாமிகள், ஐயர், அந்தணர், என்றும் எப்படிப் பார்ப்பனர் மட்டும் பொது சமுதாயத்தில் உயர்வாழ்வு பெற முடிந்தது? சமவெளித்தரையில் திடீரெனப் பெருமேடு வரவேண்டுமானால் ஒரு பெரும் பள்ளமும் அங்கே தோன்றியிருக்க வேண்டுவதே நியாயமல்லவா? பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடர்களாய்ச் செவிடர்களாய்ப் பான்மை கெட்டுப் பெயரளவில் தமிழர்கள் ஆகவே நாமிருக்க, ஆரியப் பார்ப்பனரல்லவா எல்லாத் துறைமேட்டிலும் நின்றும் விடுதலை உரிமைக் கதிரோதயக் காட்சியின்பம் அனுபவிக்கின்றனர்? அதுமட்டுமோ? பார்ப்பனர் பிற ஜாதியாரைக் கெடுத்தே ஜீவனம் செய்யும் பித்தலாட்டக்காரர்கள் என்பது உண்மையே என்பதற்கு சிலப்பதிகாரம் என்னும் நெஞ்சை அள்ளும் செந்தமிழ்க் காப்பியம் எழக்காரணமாய் இருந்த மலையாளத்தே, தமிழரின் வீரத்தை இமயம் வரை பரப்பிய வீரர்திலகம் போன்ற சேரர்குலம் விளங்கிய மலையாள நாட்டிலே வாழ்ந்த தமிழர்களை நம்பூதிரிப் பார்ப்பனர் பல வழிகளில் வருத்தித்தாழ்த்தி அடிமைகளாய் வாழவைத்துப் பிழைப்பதும், க்ஷத்திரிய வைசிய சூத்திர ஜாதிகள் யாவும் முறையே பார்ப்பனருக்குக் காவலும், பொருளும், ஊழியமும் தந்து ஆதரிக்கவேண்டும் என்று மனுஸ்மிருதி கூறுவதும், மக்களுக்குள் பேதங்கற்பித்து வாதுண்டாக்கும் நீதிகொண்ட சூது நிறைந்த வேதவேதாகமஸ்மிருதிகளை அடிப்

படையாகக் கொண்டே இந்துச் சட்டம் (Hindu Law) ஏற்படுத்தியிருப்பதும் போதிய சான்ருகும்!

பார்ப்பனசமூகத்தின் உண்மைப் பட்டிமைச் செயல்களை எடுத்துரைப்பது நாமக்கல்லாரின் கண்களுக்கு இழித்துப் பேசுவதாகத் தோன்றுகின்றது! பார்ப்பனீயத்தின் கொடுமையை மறைத்துவிட்டு அதை வானளாவப் புகழ்ந்து ஏத்தி ஏத்தித் தொழுவதுதான் கவிஞர்க்கு அன்பும், அழகும், அறிவும், ஆண்மையுமாகத் தோன்றுகின்றது!

சம்பரசத்தைக் கரைத்துக்குடித்துக் களிப்புமிக எய்தி நிற்கும் கவிஞரின் எண்ணங்கள் இவ்வாறு இருப்பதில் வியப்பொன்றும் நாமடையவில்லை; ஏன்? கவியரசர் கம்பரே, இராவணப் பெரியாரின் அன்றந்த இலங்கையினை ஆண்ட மறத் தமிழ் மன்னரின்-குள்ளநரிச் செயல் செய்யும் கூட்டத்தின் கூற்றுவரின்-போரில் சாதல்வர நேர்ந்திடினும் சூழ்ச்சி விரும்பாத பெருந்தகையின்-நல்யாழின் நரம்புதனைத் தடவி-செவியார இசைபொழியும் செம்மலின்-குன்றெடுக்கும் திரள்-தோள் வலிமையுள்ள அன்பரின் எண்ணிலாப் பெருமைகளையும் இளகிய நெஞ்சையும் மிகவும் இழிவு படுத்தி "இரக்கமில் அரக்கன்" என்றியம்பி அதற்கு மாருகச் சகோதரத் துரோகியை-பேடியை-வஞ்சகனை-காமுகனை-கயமை மிக்க கடுங்கோல் மன்னனைப் பகுத்தறிவு அற்றுப் பாமரமகன் ஒருவன் பேச்சைக் கேட்டுப் பாழுங்காட்டிடைக் கருக்கொண்டிருந்த கட்டிளங் காரிகையான சீதையை ஏமாற்றிவிட்டு வருத்திய இரக்கமற்ற நெஞ்சக வஞ்சகனை-போரில் சூழ்ச்சியே புரிந்த பொய்யனைக் கடவுளாக்கி, வள்ளலாய், மெய்யனாய், இணையற்ற வீரனாய், ஏகதாரவிரதனாய் நீதி பிறழாச் செங்கோல் மன்னனாய் அருளாழி அந்தணனாய் ஆக்கிப் புகழ்ந்து பல

வாறு பாடியிருக்கையில், கம்பதாசர்கள் நீர்வழிப்படும் புணைபோல அவர்வழியைப் பின்பற்றுமல் என்ன செய்வார்கள் பாவம்!

நாமக்கல்லாரை நாம் ஒன்று கேட்கின்றோம். ஆடு மாடு மேய்த்துக் காடு மேடும் திரிந்து நாடு நாடாய் அலைந்த ஒரு அநாகரிக நாடோடிக் கூட்டம், இந்தியாவில் தஞ்சம் புகுந்து பழையகுடிகளாகிய திராவிடர்களின் ஆதரவால் வாழத்தலைப்பட்ட ஆரியக் கூட்டம், பழங்குடிப் பெருமக்களைக் கீழ்த்தரமான அநாகரிகச் சொற்களாகிய, "அநாரியர்" "அரக்கர்" "தஸ்யூக்கள்" "சப்பை மூக்கினர்" "கரியர்" "ராக்ஷசர்" "சூத்திரர்" "தாஸர்" "குண்டர்" "குரங்குகள்" "கீழ்மக்கள்" "பஞ்சமர்" முதலிய சொற்களால் கேவலப்படுத்தி வேதங்களில் எழுதியும், நடைமுறையிலும் ஆறு கோடி மக்களைத் தீண்டவும் பார்க்கவும் தகாத தீயர்களாய்ப் பஞ்சமராய்ப் பிரித்து வைத்தும், ஆரியர்க்குக் கீழ்ப்படியாமல் எதிர்த்த பழங்குடி மக்களைச் "சண்டாளர்" "அடிமைகள்" "அஞ்ஞானிகள்" என்றும் பாகுபடுத்தி அவர்கள் பிறப்புரிமைகளைச் சூறையாடியும், அதற்கேற்ற விதிமுறைகளை நம் அரசர்களை மயக்கி ஏற்படுத்திக் கொண்டு வாழ்ந்து வருவதும், தங்கள் மதத்திற்குப் புறம்பான பௌத்த சமணர்களை "ஆதமில் அமணர்" "முரட்டமண்" "குண்டர்" "கைதவமுடைய காரமண்" எனப்பலவாறு இழித்துரையாடிப் பாடிய பாக்களையே ஆண்டவனுக்குரிய அன்புமாலையாகிய புனிதமான தேவாரத் திருவாசகங்கள் என்று நம்மையே போற்றச் செய்தும், பிற மதத்தினரைத் "துடிக்கத் துடிக்கக் கழுவேற விட்டு"க் கொன்றும், பாமரரைப்பயப்படுத்தித் தங்கட்கு உயர்வைப் பக்குவமாய்த் தேடிக்கொண்டதும், அழகா? அன்பா? அறிவா? ஆண்மையா?

பார்ப்பனரல்லாதார் நல்வாழ்வுகருதி உழைக்கும் வெளியீடுகளும், தலைவர்களும் எழுதும். பேசும் சொற்கள் 'கொச்சையான மிலேச்சர் சொல்'' எனின், இந்த 20-ம் நூற்றாண்டிலும் ஆணவமாக, "இந்தியை எதிர்ப்பவர்களை எனக்கு அதிகாரமிருந்தால் அந்தமானுக்கு அனுப்புவேன்; சுயமரியாதைக்காரர்களைத் தூக்கிலிடச் செய்வேன்'' என்றெலாம் வீறுபேசிய " சத்தியமூர்த்திகளின் '' சொல்லும், "கையில் கிடைத்த ஆயுதத்தை எடுத்து அடிக்க வேண்டியதுதான்'' என்று "தமிழ் வாழ்க'' என்று சிறை சென்ற தமிழ் வீரர்க்கு அறிவுரைகூறிய "ஆச்சாரி''களின் சொல்லும், பிணந்தூக்கியாக வீரர் ஜின்னாவை ஓவியந் தீட்டிப் பழிக்கும் 'தந்தி'களின் சொல்லும் ராமசாமி நாய்க்கர் எழுதிய காகிதங்களைச் சேர்த்தால் அவர் பிணத்தைக் கொளுத்த வேண்டிய விறகுக்குப் பதிலாக உபயோகிக்கலாம். எனக்கிண்டல்செய்யும் 'தமிழ்மணி'களின் மணிவாசகங்களும், விகடனகளின் விளையாட்டுச் சொற்களும் எவ்வகையைச் சேர்ந்தவை? என்று கேட்கிறோம்? ஒரு பெரிய சமுதாயத்தை இவ்வாறெல்லாம் இழிவு செய்து பார்ப்பனப் பதர்கள் பழிப்பது மட்டும் 'அழகா? அன்பா? ஆண்மையா?' அச்சொற்களை நினைக்கக் கேட்க—ஏன் உங்கள் மனம் நாணவில்லை? தலை குனியவில்லை? பகுத்தறிவு பதைக்கவில்லை?

இதன்பின் நம் கவிஞர், பார்ப்பனரை - பார்ப்பனரல்லாதாரின் இயக்கப் 'படுகுழி' நின்றும் கரையேற்றச் சரித்திர ஏணியைத் தேடிக் கொணர்கின்றார்! படியுங்கள் படிப்பாளிகளே!

"சரித்திரம் அறிந்த நாள் முதல்........................தமிழ் நாட்டின் கலைகளிலும் இலக்கியங்களிலும் பிரித்துப் பேச

முடியாதபடிப் பின்னிக் கிடக்கும். பிராம்மண சமூகத்தை ஏகோபித்து இழிவு சொல்வது தமிழர்களுடைய நாகரிகம் தற்கொலை செய்துகொள்ள முயல்வது போலும்!" என்கிறார் கவி. சரித்திராசிரியர்களே, கவிஞரின் சொல்லைக்கேட்டே னும் பாடத்தை இனிமேல் திருப்பி எழுதுங்கள்!

[ஆரியராகிய P. T சீனுவாசய்யங்கார் M. A., L. T., ராமஸாமி அய்யங்கார், C. V. ராமய்யர் B.A., L.T., முதலிய பலர் எழுதிய சரித்திர பாட புத்தகங்களிலும் ஆரியர் வேறு திராவிடர் வேறு என்று விளக்கமாக எழுதியிருக்கக் காண லாம். இவ்வாண்டு S. S. L. C. பரிக்ஷைக்கு உள்ள S. நாராயண அய்யங்கார் B A,L T., எழுதிய இந்துதேச சரித்தி ரத்திலும், ஆரியர்—திராவிட இனவேற்றுமை விளக்கப் பட் டிருக்கிறது. கலைகளிலும் இலக்கியங்களிலும் கூட ஆரியப் பார்ப்பனரை உயர்த்தியே பேசப்படுகிறது! சங்க இலக்கியங் களிலும் தேவாரத் திருவாசகத் திவ்ய பிரபந்தங்களிலும் பல இடங்களிலும், திராவிடர் ஆரியர் ஒழுக்கமும் கலையும் வேறு வேறாகப் பிரித்துப் பேசப்பட்டுள்ளன. இலக்கணங்களிலும் கூட, "பார்ப்பன எழுத்து—பார்ப்பனப் பாட்டு, சூத்திர எழுத்து சூத்திரப் பாட்டு எனவும்," பார்ப்பனப் பாங்கன் சூத்திரப்பாங்கன்" எனவும், "பார்ப்பன வாகை-பார்ப்பன முல்லை, வாணிக வாகை- அரசவாகை" எனவும் விளக்கமாகப் பிரித்துப் பேசப் பட்டிருப்பதைத் தொல்காப்பியம் முதலாக இலக்கண விளக்கப் பாட்டியல் ஈறாக உள்ள நூல்களைக் கற்ற வர் அறிந்து கொண்டிருப்பர்! அத்துணையளவும் தேடுவா னேன்? இன்றைய சமுதாய வாழ்விலும் கூடப் "பார்ப்பனச் சேரி (அக்ரகாரம்) பறைச்சேரி" "பார்ப்பனர் குளப்படித் துறை மற்றவர் துறை" [சுடுகாட்டிலும் இப்பிரிவு இன்னும்

இருக்கிறது. இப்பிரிவை ஒழிக்க முயன்ற மங்களூர் நக ராட்சிக் கழக உறுப்பினர் வாமனு என்ற தோழர் சிறை யுற்ற செய்தி தமிழர்கள் நினைவிலின்னும் இருக்கிறது] என்ற பாகுபாடும், திருமணம், இழப்பு முதலியவற்றிலும் ஆரியப் பார்ப்பனன் தனி ஏற்றம் பெற்றுள்ளமையும் சமபந்தி உணவை அரசியல் பார்ப்பனர் கூட, ஆதரிக்காமல் தனித்துச் சாப்பிடுவதும் (திருவையாற்றில் மாணவர் உணவு விடுதியில் நிகழ்ந்த ஆரியதிராவிடப் போரையும், காலஞ்சென்ற வ. வே. சு. ஐயரின் குருகுலப் போரையும் தமிழர்க்கு நினைப் பூட்டுகிறோம்) ஆகிய இச்செயல்களும் பார்ப்பன சமுதாயம் திராவிட சமுதாயத்துடன் ஒன்றுபட்டுப் பிரித்துப் பேச முடியாதபடிப் பின்னிக் கிடக்கவில்லை என்பதை நன்குக விளக்குமே! அப்படிப் பின்னிக் கிடக்குமானால், உண்மை யான ஓர் ஐயரை-ஐயங்காரை-சர்மாவை-ராவ்ஜீயை-காண முடியாது; இன்றுள்ள நூற்றுக்கணக்கான ஜாதிப் பாகுபாடு களும் கலப்பு மணத்தால் மறைந்து போயிருக்கும்! பார்ப் பனன் பெண்ணைப் பறையன் மணக்கவும்; சக்கிலியன் பெண்ணைப் பார்ப்பான் மணக்கவும், வழி ஏற்பட்டிருக்குமே! 'திரு'வுக்குப் பதில் 'ஸ்ரீ'யையும், 'ஆச்சாரிக்குப்'பதில் 'ஆசாரி' யையும 'விஸ்வபிராம்மணாள்' என்பதற்குப் பதில் 'விஸ்வ கர்மா'வையும் நடைமுறையில் கொணர அற்புதமான சாணக் கிய மூளையை உடைய திரு. ஆச்சாரியார் முதலமைச்சராய் இருந்த போழ்து முயன்று இருக்க வேண்டாமே? இன்று பார்ப்பனக் குலப் பாசறையாக விளங்கும் சூழ்ச்சியிலே கைதேர்ந்த 'ராஜாஜி'க்காக வடநாட்டு ஆரியம் பரிந்து பேச வும், மக்களின் பெருமதிப்பும், பணிவும், அடக்கமும் தியாக மும் உடைய காமராஜர் 'clique' என்று இகழப்பட்டு அவமதிப்புறவும் தமிழகம் எங்கும் காங்கிரசுக்குள்ளவே

'ஆரியதிராவிடப் போர்முழக்கம்' சக்தி சிரிக்கவும் ஆனநிலை உண்டாகி யிருக்க வேண்டாமே? இவற்றால் என்ன தெரிகிறது? பார்ப்பன சமுதாயம் இன்னமும் வேதகாலத்தில் தான் இருக்கிறது என்பது தெளிவாக வில்லையா? பொய் கூறினாலும் பொருந்தப் புகலவேண்டாமா?

.... .... .... ....

"ஐயோபாவம் நோகிறதோ" உன் உடலுக்கு! நீ எத்தனை பேரை நோக வைத்தாய்; மடையன்! அடியுங்கள்; கம்பத்தில் கட்டி நையப் புடையுங்கள்; பாதகன்! ஆம் அதுதான் நல்ல வழி; அவன்கையை ஒடித்துக் காலை மிதித்து உதையுங்கள்; அவனுக்கு நன்றாகப் பாடங் கற்பியுங்கள்."

"இவனைமட்டும் அடித்து என்ன பயன்? இவன் கூட்டத்தையும் அடக்கி ஒடுக்க வேண்டும் திருட்டுப்பயல்கள்!" "இவர்களை இப்படியே விட்டுக் கொண்டுபோனால் ஊரையே அடித்து உலையில் போட்டு விடுவார்கள். பிறகு அமைதியாக நாட்டில் வாழமுடியாது;"....................."பிறகு நாமெல்லாம் காட்டுக்குத்தான் போகவேண்டும்; அயலான் மனைவியைக் கைதொட்டு இழுத்தும், பிறர் பொருளைத் திருடியும் வழிப் பறி செய்தும் வாழும் வன்னெஞ்சத் திருடர் கூட்டத்தைச் சும்மா விட்டுவிடக்கூடாது."

"அதற்காகத்தான் இந்த உதை (கம்பத்தில் கட்டப்பட்டிருக்கும் ஒரு கள்ளனை உதைக்கிறான்) காமுவைத் தொட்டிழுத்த இவன் காமம் பிடித்த கரங்களைச் சுட்டெரிக்க வேண்டும்; படுபாவி; எத்தனைப் பேரை அடித்துப் பொருளைப் பறித்தான்! (மேலும் எட்டி எட்டி உதைக்கிறான்; திருடி அகப்பட்டவன் திக்கற்றவன்போல் அழுகிறான் திருட்டுவிழி விழித்து)"

"ஆமாம்; இவனைக் கொண்டு இவன் தோழர்களையும் கண்டு பிடித்துச் சிறையில் அடைக்கவேண்டும். நாட்டைச் சூறையாடி நல்லமைதியை நாசமாக்கும் நாகரிகமற்ற இந்த நாடோடி நயவஞ்ச நரிக்குலத்தைக் கட்டாயம் நசுக்கத்தான் வேண்டும்; இந்தத் தடியனைப் 'போலீசில்' ஒப்படையுங்கள்!"

*   *   *   *

மேலே தீட்டிய உரையாடல், திருடிவாழும் திருக்கூட்டத்தான் ஒருவன் களவு செய்யும் போது, கையும் மெய்யுமாய்ப் பிடிக்கப்பட்டுக் கம்பத்தில் கட்டுண்டு கசையடி வாங்கிக் கதறும் காட்சியைக் கண்டு, களவு கொடுத்த மக்கள் தம் ஆத்திரத்திலும், காரண காரியத் தொடர்ச்சியுடன் தங்களுக்குள் பேசிக் கொண்ட தாகும்! மக்கள் பேசியதில் நீதியும் நேர்மையும் உண்டு! கைக்காரக் கள்ளன் கதறலில் கடுகள்வும் நியாயம் இல்லை என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர்! பலரையும் பல நாள் பரதவித்து அழவைத்த பாதகன் சில நேரமாவது தன் திருட்டை யுணர்ந்து சிந்தித்து அழச் செய்வது செம்மையான நீதி தான்! அம் முறையைத் தவறெனக் கூற யாரும் முன் வரமாட்டார்கள்; கள்ளனால் கரவாய்க் கைக்காசு பெற்றுக் களிப்புற்று வாழும் காட்டிக் கொடுக்கும் துரோகிகளான ஒரு சில்லரை ஒழித்து!

கள்ளனால் கைநிறையக் காசு பெற்ற கைதவ மாக்கள் என்ன செய்வார்கள்? தங்கட்கு நல்வாழ்வு தந்த கள்ளன் கதிகலங்கிக் கதறும் காட்சியைக் கண்டு கருணையுடன் அவனை மன்னித்து விடும்படிப் பரிந்து பேசுவார்கள், ஊதத்தை வாதத்தை ஊரார்முன்னே உளறிக் கொட்டி! — அவ்வாறு அத்தரகன் திருடியவனுக்குப் பரிந்து பேசுவதுங்கூட அவ

னிடம் அவனுக்குள்ள பற்றுல் அல்ல; நன்றி செய்தவனுக்குக் கைம்மாறு செய்ய வேண்டும் என்ற கடப்பாட்டை அவன் அறிந்திருப்பதனுல் தான்!

சொந்தப் பொருளைத் திருட்டுக் கொடுத்துள்ள ஊர் மக்களிடம் திருடனை மன்னித்து விடும்படி இரக்கமுடன் கூறும் அத்தரகனின் வாதம் இப்படித்தான் இருக்கும்:—

"அன்பர்களே, அவனை அடிக்க வேண்டாம்; ஹிம்சிப்பது பாவம்; அறியாமையால் தானே திருடினுன்! சிறியோர் செய்த சிறு பிழை எல்லாம் பெரியோராகிய நீங்கள் பொறுத்துக் கொள்வதே மேலான செய்கையாம்"—இவ்வாறு வேண்டுவான் கற்றறிந்த அஹிம்சாவாதி!

"........திருடுவது குற்றமா? இல்லாமையால் அல்லவா திருடுகிருன்? அவனை வறியனுய் வைத்திருப்பது சமூகமல்லவா? எனவே திருட்டுக்குற்றம் சமூகத்தைத்தான் சாரும்! அதற்குத் திருடன் என்று அவனை அடிப்பது செம்மையாகுமா?........நம்மில் பல பெருந்திருடர்கள் இருக்கிருர்கள்! அவர்கள் பகல் திருடர்கள்! 3000 தொழிலாளிகளுக்கு வேலை தருவதாய் மொழிந்து அவர்களின் முயற்சியாலாகிய முழு உழைப்பின் பலனையும் தானே அனுபவிக்கும் முதலாளி ஒரு முதல்தரத் திருடனல்லவா? அவனை ஏன் அடிக்காமல் போற்றுகிறீர்கள்? எனவே இவனை விடுவித்து விடுங்கள்" என வேண்டுவான் பொதுவுடைமைப் பூச்சாண்டியால் பூதேவர்க்கு நலம் தேடும் மேடைப் பிரசங்கி!

"...........மெய்யன்பர்களே, திருடர்களைப் பழிப்பது எல்லாம்வல்ல எம்பெருமானையும் அவன் படைத்த ஒரு

தொழிலேயும் பழிப்பது போலாகும்! களவு நூலே ஏற்படுத்திய வரே கடவுள் திலகமாகிய முருகனல்லவா? களவு நூலே கர்ணீசுதர் என்ற வடமொழி வாணர் இயற்றி யிருப்பதும் தந்திர உக்திகள் பல நூல்களில் சாற்றப் பட்டிருப்பதும், களவியல் மேலானதாக அகப்பொருளுடைய தமிழர் புகழ்ந்திருப்பதும், நோக்கின் களவுத் தொழிலேக் குற்றமுடையதாய்க்கூற முடியுமா? முருகன் வள்ளியைக் கரந்து மணந்ததும், தேவேந்திரன் களவு வழியில் அகலிகையைப் புணர்ந்ததும் பகவான் கிருஷ்ண பரமாத்மா கோபியர்கள் வீட்டில் தயிர், பால் முதலியவற்றோடு சேலே முதலியவற்றைத் திருடியதும் அன்றி 12,000 கோபியருடன் கூடிக் கலவி புரிந்து கொட்டமடித்ததும், சலந்தராசுரன் மனேவியைத் திருமாலும், பார்வதியைப் பிரமனும் இச்சித்து மகிழ்ந்ததும், பரமசிவன் பூதகணங்களேக் கொண்டு சுந்தரமூர்த்தி நாயனுரை வழிப்பறி செய்ததும் நோக்கின், களவுத் தொழிலேக் கடவுள்களே கையாண்டதாகத் தெரியவரும்; ஆயின், கள்வரையும் அவர் தொழிலேயும் பழிப்பது நிரீசுரவாதமேயாகும்; நிரீசுரவாதம் நரகத்துக்கே வழியாகும்; அன்றியும், பெயர் பெற்ற திருடர்களும், காமுகர்களுமான, தேவேந்திரன், பிரம்மா, முருகன், கணபதி மகாவிஷ்ணு, பரமசிவன், இராமன், கிருஷ்ணன், அநுமவீடண சுக்ரீவ ஆழ்வார்கள், பஞ்சபாண்டவர்கள் முதல், இன்றுள்ள மகாத்துமாக்கள் மகரிஷிகள், மடாதிபதிகள். முதலியவர்கள் வரையும் உள்ள 'பெரியோர்களும், கடவுள்களும்" பிறந்த திருடர் குலத்தையா திட்டி அவமதிப்பது? அது தருமம் அல்ல; அப்படி வைவதால் யாருக்கு என்ன லாபம்? பாபம்தான் மிகுதி.............. பெரும் பெரும் அரசர்களான அசோகர், ஔரங்கசீப், பீஷ்வாக்கள் முதலிய எல்லோரையும் ஈன்றெடுத்தது அக்குலமல்லவா? அஃதாவது அவ்வரசர்கள்

திருட்டுத்தனமாகத் தம் முன்னரசர்களைத் தோற்கடித்துக் கொன்றல்லவா அரசினைக் கைப்பற்றினர்?.............புத்த விக்ரகத்தைக் கவர்ந்து போய், திருமாலுக்கு விழா நடத்திய திருமங்கைமன்னரும், குதிரை வாங்கக் கொடுத்த கோடி கோடி பொன்களைக் கொண்டு விடையேறும் குழைக்காத னுக்குக் கோயில் கட்டிய மாணிக்கவாசகரும், வரிப்பணத் தால் இராமாலயங் கட்டி விழாச் செய்த இராமதாஸரும் திருடர்கள் குலத்தில் பிறந்தவர்கள் அல்லவா, அவர்கள் செய்த தொழிற் பிரிவினுல்?.... ........திருடர்களைப் பதிதர்கள் என்றும், பாதகர் என்றும் பழிப்பது, மேற்கூறிய பெரியோர் களையும், அவமதிப்பதாகாதா?........ ...எனவே, இத்திருடனை விடுதலை செய்வதே நாகரீகம் உள்ளவர்க்கும்—கடவுளுக்குப் பயந்துள்ள பக்திமான்களுக்கும் அழகாகும்!........" என்று இருக்கும் புராணப் பிரசங்கியின் சொற்பெருக்கு.

தோழர்களே, தக்கன இன்னவை, தகாதன இன்னவை என்று பிரித்து உண்மையை உணர உங்கள் பகுத்தறிவைக் கொண்டு எண்ணிப் பாருங்கள். திருடர் செயல் 'செம்மை யானது என்று கூறும் குவிஸ்லிங் திருக் கூட்டத்தாரின் குறுக்கு வாதச் சொற்கள், எவ்வளவு பொருத்தமற்றவை, கீழ்த்தரத்தினைச் சார்ந்தவை, என்பதை உணர்ந்து கொள் வீர்கள். "தமிழ்நாட்டுக்கு மட்டுமல்ல, இந்திய தேச முழு துக்குமே பெருமை கொடுத்தவர்கள் பலர் பிறந்த ஒரு சமூ கத்தைச் சிறுமை பேசுவது தருமம் அல்ல" என்ற நாமக்கல் கவிஞரின் நாவன்மை மிக்க வாதமும், தியருக்குப் பரிந்து பேசிய "செய்ந் நன்றி மறவாச் செம்மலின்" திருவாய் மொழியையே ஒத்து இருக்கக் காண்பீர்கள். விரிவஞ்சி விடுத்து ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப் பது போல் அவர் தம் வாதத்தை இனி மறுப்போம்;

'ஒரு சமூகத்தில் நல்லவர்கள் சிலர் (உண்மையிலேயே) பிறந்து விட்டதனுலேயே அச்சமூகத்தின் சிறுமையைப் பேசுவது தருமம் அல்ல' என்று கவிஞர் கூறுவது உண்மையானல், 'எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச் செப்பிய வள்ளுவனையும்" பொங் கும் மகிழ்வூட்டும் சங்கத் தமிழ்ப் புலவோரையும் "கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக"க் கல்லேயும் கனிவிக்கவல்ல அருட்பாக்களேப் பாடிய அடிகளேயும், நீதி தவருது நேர்மையோ டாண்ட மூவேந்தர்களேயும், வரையாது வழங்கும் மாரியும் நாணு மாறு கொடைவல்ல மூவேழ் வள்ளல்களேயும், பத்தினிக் கடவுள் படிமம் சமைக்கப் பகைவரை வென்று பனிபடும் இமயத்தில் வெற் றிக்கொடி நாட்டிய வீரசிகாமணிகளேயும், எந்நாளிலும் குறைவில் லாது ஈன்று என்றும் இணேயற்று இலகும் திராவிட சமுதாயத் தைத் "தன்னேச் சொன்னல் கோபத்தையும் கொதிப்பையும் உண் டாக்கக்கூடிய வார்த்தைகளால்" "சஹஸ்ரார்ச்சனே" செய்வது மன்றி, எட்டிலும் சட்டத்திலும் என்றும் நிலேயாக எழுதிவைத்துக் கொண்டு ஆளும் சிறுமைமட்டும் அறமாகுமா? அதனேக் கவிஞர் என் அறிவுக் கண் கொண்டு நோக்கவில்லே? மற்றும், கவிஞரின் இவ்வாதம் கற்ருேர் ஏற்கும் உண்மையாயின், எந்தச் சமூகத்திலும் எண்ணிலாப் பெரியோர் தோன்றியிருத்தலின், எந்தச் சமூகத்தை யுமே, சிறுமை பேசுவது அறமல்ல என்பது பெறப்படுவதும் அல்லாமல், பார்ப்பனர்கள் கட்டுப்பாடாக இமயம் முதல் குமரி வரையும் ஒருமனதாக இருந்து பார்ப்பனரல்லாத பெருங்குடி மக்க ளின் சமூகத்தை முன்னேறவொட்டாமல் இழித்துத் தாழ்த்தி வருவது, மன்னிக்க முடியாத பெருங்குற்றமாவதும், அன்றியும், தீயர்கள் பெருகிய எச்சமூகத்தின் நன்மையையும் பேசுவதும் அற மல்லவாதல் வேண்டுமன்ருே?

இனி, சேலம் திரு. நாகராஜய்யங்கார். மதுரை திரு. அ. வைத் தியநாதய்யர், திரு. சி. ஆர் ஆச்சாரியார் போன்ற பல ஆரியரின் அணேப்பினுலும். காரைக்குடி திருநாவுக்கரசு, அண்ணுமலேச் செட்டி யார்கள் போன்ற பார்ப்பனீய—ராமராஜ்யத்தையே நிலேநாட்டப்

பாடுபடும் காங்கிரஸ்மன்றப் பற்றுமிக்க பெருஞ்செல்வரின் பணப் பிணைப்பினாலும் கல்கி, விகடன், தினமணி போன்ற ஆரிய ஏடுகளின் விளம்பரத் துணையாலும் விரைவில் தமிழ்நாட்டுத் தேசிய கவிஞராகித் திகழும் நம் நாமக்கல் கவிஞரின் வாதத்தில் நவிலப் பெறும் "இந்திய தேசம் முழுவதுக்குமே பெருமை கொடுத்த நல்லவர்களின்" பெருமையையும் சற்று ஆராய்ந்து பார்த்தால், அத்தகைய "பெரிய மனிதர்களால்" நாட்டுக்கு—சிறப்பாகத் தமிழ் நாட்டுக்குக் காதறுந்த ஊசியின் பயனளவுங்கூடப் பயன் ஏற்படவில்லை என்பதுமன்றித் திராவிடர்கள் அவர்களால் எய்க்கப்பட்டார்கள் என்பதும் விளக்கமாகும்.

கவிஞர் முதலிலே காட்டும் "உதாரண புருஷோத்தமர்கள்" சங்கராச்சாரியர், ராமானுஜாச்சாரியர், மத்வாச்சாரியார் முதலிய வேதாந்திகளும் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், தயாநந்த சரஸ்வதி, ரமணமகரிஷி போன்ற முனிவர்களும், ஸ்ரீரானடே, கோகலே, சுரேந்திரநாத பானர்ஜி, முத்துச்சாமி ஐயர், வீரராகவாச்சாரியர், ஜி. சுப்பிரமண்ய ஐயர், எஸ். சுப்ரமண்ய ஐயர், அனந்தாச்சார்லு ரகுநாத ராவ், வ. வே. சு அய்யர், சுப்ரமண்ய பாரதி முதலிய "தேசோத்தம பாரதபுத்ர சிகாமணிகளுமாவர்".

மேற்கூறப்பெற்ற பார்ப்பனப் பெரியோர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த தலை சிறந்த செயல்களும் பெருமையும் கொள்கையும் கீழே தரப்பட்டுள்ளன:—

**சங்கராச்சாரியார்:—** இவர் சமயாசாரியர்களில் முதலில் தோன்றியவர். மலையாள நாட்டில் காலடி என்ற ஊரில் பிறந்த நம் சங்கராச்சாரியார். ஒரு கொழுத்த ஆணவம் பிடித்த பழுத்த வைதீக நம்பூதிரிப் பார்ப்பனராவர் அப் பார்ப்பன குலத்தின் பரந்த 'பெருமை''யைப்பற்றி நம்மைவிட மலையாள நாட்டுத் தமிழர் நன்கு அறிவர். இவர் பரமசிவனின் அவதாரமாம். எனவே, கடவுளருள் பெற்ற சங்கராச்சாரியார் தமிழ்

நாட்டுக்கு—இகத்திற்கு வேண்டிய நன்மைகளைச் செய்யாமல் பரத்துக்கு வேண்டியதையே அத்துவிதமாக அருளினார்; எனவே, பார்ப்பனரல்லாத மக்களைப் பார்ப்பனர் வஞ்சித்து எய்க்க ஒரு வழியாக, நம் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையான மதம் பயன் பட்டதே ஒழிய, இகலோக வாழ்வில் உள்ள நமக்கு இவரால் ஒரு பயனுமில்லை. மற்றும், இவ்வையர்சிகாமணி இயம்பும் கொள்கை "கடவுள் இரண்டல்ல; ஒருவரே! எல்லாவற்றிலும் கடவுள் நீக்கமற இருக்கிறார்" என்பது. ஆனால், தன் கொள்கைக்கே எதிராக, ஒரு நாள் காசிமாநகரில், இவர் கங்கையில் நீராடித் திரும்புங்கால் எதிர்ப் பட்ட ஒரு சண்டாளனைக் கடிந்து தூர விலகும்படிக் கட்டளையிட்டும், அச்சண்டாளன் அவர்க்கு ஜாதி ஆணவத்தை அகற்றியும் உண்மை ஞானத்தைப் போதித்தும் சென்றான், என்று இவர் வரலாறு இயம்பும்; அதை நோக்கின் பார்ப்பனராகிய சங்கரரால் பார்ப்பனரல்லாதார் தெருவில் நடக்கும் உரிமையைக்கூட இழந்து வருந்தினர் என்ற உண்மையும், அச்சண்டாளனே பார்ப்பனர் குலத்துக்கு அறிவுறுத்தியும் அவனைப் போற்றாமல், சங்கரர் தம்மையே உலகம் போற்றும்படி **"மனிஷா பஞ்சகம்"** என்ற நூலை இயற்றித் தம் ஜாதி புத்தியை உலக மக்கள் முன் தெரியாதவாறு மறைத்ததும் விளங்கும். எனவே, சங்கரரால் நாம் அடைந்த பலன் இன்றளவும் பார்ப்பனத் தெருவில் பறையர் நடக்கும் உரிமையற்றிருப்பதே யாகும். (இதை ஒழிக்கவே **வைக்கத்தில் பெரியார்** பல இயக்கத் தோழருடனும் தாழ்த்தப்பட்ட மக்களுடனும் போராடி வெற்றி பெற்ற செய்தியை யாவரும் அறிவர்)

அன்றியும் **"அத்துவித மார்க்கம்"** நிலைநாட்டிய சங்கர ஐயர் தாம் பிறந்த இடத்தில் தம் கொள்கைகளை நிலைநாட்ட முடியாமல் போனதுமன்றித் தம் தாயின் மரணச் சடங்கை நடத்தவும் அவ் வூரார் உதவி செய்யாததைக் கண்டு, ஆத்திரத்தால் அவ்வூரைச் சபித்ததும், தம் கொள்கையை ஆதரிக்காத **கிரகசன்** என்ற பைரவன், **அபினவகுப்தன்** என்ற சாக்தன் முதலிய மதத் தலைவரையும், பௌத்தம், சமணம் முதலிய இருபத்தொரு மதங்களையும் துர்மதங்

கள் எனக் கண்டித்தும், அம்மதவாதிகளில் பல அறிவாளிகளைப்பல வழியில் கரவாகக் கொன்றும், "முடிவில் அமருகன் என்ற அரசன் இறந்தபோது அம்மன்னனின் அந்தப்புரப் பெண்களையும்,மனைவியையும், அவ்வரசனின் பிணத்தில் தம் உயிரைப் பாகாயப் பிரவேசம் செய்து, அவ்வரசனாக நடித்துக் காம மிக்கவராய்த் தம்மையே மறந்து போகம் அனுபவித்திருந்தார்" என்ற அவர் வரலாற்றால் பார்ப்பன மதத்திற்கு விரோதமான கொள்கையுடைய பிற மதத்தினரும், பெண்களும் முறையே அல்லலுற்றுக் கற்பழிக்கப்பட்டுக் கலங்கினார்கள் என்பதே தெளிவாகும். ஆயின் சங்கராச்சாரியார் போன்ற சூழ்ச்சியில் கைதேர்ந்த ஆரியர் பிறந்த பார்ப்பனீயத்தின் செயலைப் பகுத்தறிவுடையவன் எவனும் புகழ்ந்து பேசமாட்டானல்லவா? அப்படியிருக்க ஆரியத்தைப் பழிப்பது தருமம் அல்ல என்ற கவிஞர் வாதம் நேர்மையாகுமா? எண்ணிப்பாருங்கள்!

**இராமானுஜாச்சாரியார்:**— இவர் செங்கற்பட்டில் உள்ள **ஸ்ரீபெரும்புதூர்** என்ற நகரில் பிறந்த **வைஷ்ணவப் பார்ப்பனர்.** இராமநாதபுரத்தில் உள்ள **திருக்கோஷ்டியூரில்** தாம் கேட்ட மதத்தைப்பற்றிய உண்மைகளை, உலக மக்களுக்குக் கோபுரத்திலிருந்து கூறியதாகக் கதை. அதுவும் பொது மக்கள் மேலுள்ள நேயத்தால், குருத்துரோகமும் அஞ்சாமல்செய்து கூறியதாம்! அத்தகைய தியாகி அன்புடன் கூறியது என்ன? அத்துவிதமாகிய சங்கராச்சாரியரின் மதத்தினும் மேலான மத மார்க்கம் எனப்பொருள்படும் விசிஷ்ட **அத்துவித மார்க்கம்** ஆம்! இம்மார்க்கத்தால் விளைந்த பலன், மக்களுக்குள் கடவுளையும் மோக்ஷலோகத்தையும் பற்றிய கருத்தே மிகவும் வளர்ந்ததே ஒழிய, உயிர் வாழ்க்கையில் இங்கே வேண்டிய கவலை ஒழிந்ததும், பார்ப்பனீயத்தைக் கண்மூடிக்கொண்டு பின்பற்றியதுமே ஆகும். இவரால்தான் நம் திராவிட நாட்டில், சைவ **வைஷ்ணவப் போராட்டமும்,** ஆரிய அரசனான ராமனின் புகழும் பரவத் தொடங்கின.

இவர்,செய்த இத்தகைய செயலால் மக்களுக்குள் அமைதி கெடுவதறிந்தோ, அல்லது தன் சைவப் பற்றாலோ, அந்நாள் ஆண்ட

சோழராஜனால் நாடு கடத்தப்பட்டு மைசூரில் **விஷ்ணுவர்த்தன மகாராஜனான** ஹொய்சாலகுல மன்னனிடம் புகலடைய **வேண்டிய** நிலை சேர்ந்தது. பாவம்! '**சங்கரர்** வழி தவறு' எனும் **இவர், தாம்** கண்ட உண்மையான வழியால் சோழனை வெல்லமுடியாமலும், தம் கடவுட் பக்தியால் சோழர்க்கும் சைவர்க்கும் தம் வழியின் மெய்யை உணர்த்தமுடியாமலும், அச்சோழன் சாகும்வரைத் தமிழகத்தில் தலைகாட்ட முடியாமலும் வாழ்ந்த செய்தி சரித்திர ஆதாரமுடைய தாகும். இதனால் இவர் மதமும் சங்கரர் மதமும் உண்மையல்ல என்பது தெளிவாம்

உடையவரான இவர் பார்ப்பன மதம் மிகவும் வளர்ச்சியடைய வில்லை என்பதறிந்து, அதனால் பார்ப்பனர் நலம் பேண, பார்ப்பன ரல்லாதாரையும் தம்மதத்தில் பூணூலணிவித்து நெற்றியில்நாமத்தை நன்றாகப் போட்டுச் சேர்த்து வந்தார்! ஆனால் வைதிகப் பார்ப்பனர் அதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யவும், **பாஷ்யகாரர்** எனப்படும் இவர், பின் சூழ்ச்சியைக் கைவிட்டுவிட்டார். ஆனால் பார்ப்பனர் பெறும் உரிமையை அடைய விரும்பிய சில திராவிட மக்கள் அவர் மதத்தையும் சூழ்ச்சியையும் பின்பற்றியும் அவர்கள் எல்லாம், சாத் தாத வைஷ்ணவ **பிராம்மணர்** என்று தனித்துப் பிரிக்கப்பட்ட னர்! இன்றுங்கூட இராமானுஜரால் மதம்மாறிய திராவிடர்கள், முன் தாம் வகித்த ஜாதியை ஒட்டியே "எங்கும் கண்ட திருமேனி" "எறி இறங்கும் திருமேனி" முதலிய குழூஉக் குறிகளால் அழைக் கப்படுவதும் ஸ்மார்த்த—வைதிகப் பார்ப்பனர்களால், இன்றும் வைஷ்ணவ ஐயங்கார் பிராமணர்களிடம் சமபந்தி உணவும், பெண் கொடுக்கல் வாங்கலும் செய்யாமல் உள்ளமையும் பிறவும் இராமா நுஜரின் சூழ்ச்சியை விளக்கப் போதிய சான்றாகும்!

சீர்திருத்தம் செய்வதாகச் சூழ்ச்சி புரிந்தும், பார்ப்பனரல்லாதா ருடன் சேர்ந்து முழு மனதுடன் பூணூலை அறுத்தெறிந்துவிட்டு உழைக்க முன்வராமல் தமிழர்களைப் பாரப்பனராக்கிய செயலால், பார்ப்பனரே உயர்ஜாதிக்காரர்கள் என்ற **ஆணவமான எண்ணம்**

இராமாநுஜருக்குக் கடைசிவரை போகவில்லை என்றால், இவரால் இந்திய உபகண்டம் அடைந்தது சிறுமையல்லாமல் வேறென்ன பெருமை வாழ்கிறது? இவரும் சங்கரரைப்போலவே வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் சுற்றுப் பிரயாணம் செய்து பல மதங்களைக் கண்டித்தும் பிறர் வணங்கும் கடவுள்களைத் தாழ்த்தியும் கூறிப் பார்ப்பனர்களுக்கு ஆக்கம் தேடியவரே ஆதலின், இவரால் திராவிடராகிய நமக்கு யாதொரு பயனுமில்லை; நஷ்டமே மிகுதி என்பது தெளிவான செய்தி ஆகும்

**மத்வாச்சாரியார்:**—இவர் கன்னட நாட்டுள்ள உடுப்பிக்கு அடுத்த **பஜகா** என்ற ஊரில், வனவாசி கதம்ப அரசனான **மயூர வர்மன் என்னும் பார்ப்பன** அரசனால் வடநாட்டிருந்து தமிழ்நாட்டில் குடி ஏற்றப் பெற்ற பார்ப்பனர்களின் வம்சத்தில் பிறந்தவர்; அஃதாவது, வடநாட்டில் பௌத்த மதத்தைத் தழுவிய மக்களைத் தயை தாட்சண்யமின்றி வெற்றிகரமாகப் பல சூழ்ச்சிகளால் கொலை செய்வித்த ஆரியப் பார்ப்பனராகிய **குமாரிலபட்டரின்** (இவர் கொடுமைக்கு ஆற்றாத மக்கள் இவரைப் பின்னாளில் உமித்தீயில் வைத்து எரித்துவிட்டனர் என்பர்.) தலைமையை ஏற்றுக்கொண்டு ஒழுகிய கர்ம மார்க்க ஆரிய வமிஸாவளியிலேயே மத்வாச்சாரியார் தோன்றினார். இவர் வாயுபகவானின் அம்சமாம்! இவரும் குமாரிலபட்டரைப்போலவே பிற மதத்தையும் மதத்தினரையும் தாக்கித் தம் மதத்தைப் பரப்பினார். இவர் கையாண்ட 'பீமன்—மணிமன்" போர் முறையை—அதாவது தோள்வலியும் வாள்வலியும்கொண்டு பிறரை வெல்வது; தர்க்க ரீதியில் எழுதும் தாள்வலியால் அல்ல;—ஒரு முறை இவர் மாணவர்களே இவரை நம்பவில்லையாம்; அப்போதும் "பீம—மணிமன்" போர்முறையால் அவர்களை வென்றாராம்.

இவர் சிருங்கேரி மடத்துக்கும் சங்கரரின் மதத்துக்கும் விரோதமாக உடுப்பியில் கிருஷ்ணர் கோயில் கட்டி ஒரு மடம் ஏற்படுத்தித் துவித மார்க்கத்தைப் பரப்பினாராம். துவித மார்க்கம் ஆவது இரண்டு; ஒன்றல்ல என்பது. அஃதாவது பரமாத்மா

உயர்ந்தவர்; ஜீவாத்மா தாழ்ந்தது என்ற உண்மையைப் பரப்புவ் துடன், மகாவிஷ்ணுவே முதல் தெய்வம் என்றும், பிற தெய்வம் எல்லாம் சிறுதெய்வம் என்றும். பரமன் அருளையடைய அநுமானைத் தொழுவதே முதல்வழி என்றும் கூறினர். நாட்டுக்கும் ஏட்டுக்கும் தொடர்பும் பொருத்தமும் இல்லாத வழியில்—இகலோக வாழ்வின் கேட்டுக்கு வழியாய், ஒரு சில வேதாந்த நூல்களையே எழுதினர் இவர் வரலாற்றால் நாமறிவன:—"பார்ப்பன மதமே சிறந்தது; அனுமானைத் தொழுது அரியை அடைவதே முத்தி வழி. 'இப்பேரின்பச்' சிறுநெறியே துவித மார்க்கமாகும்! இவரால் பிற மதத்தினர் அல்லலுற்றனர்" என்பனவாம்.

தோழர்களே, எண்ணிப் பாருங்கள்; மூன்று மதாச்சாரியர்களும் பார்ப்பனராய்ப் பார்ப்பன மதத்தைப் பரப்பிப் பாமர மக்களைக் கடவுள் பித்தில் புகுத்தி மயக்கி வேத விதிப்படி வருணசிரமத்தை வளர்த்தனர் என்ற உண்மையை அறிந்த பிறகும் பார்ப்பனீயத்தை நாம் புகழ முடியுமா? இம் மூன்று பெரிய மனிதர்கள் என்ன செய்கிறார்கள்? வைஷ்ணவத்தைச் சங்கரரும், சைவத்தை இராமாநுஜரும் மத்வரும், அன்பற்று அறியாமை வயப்பட்டுக் கண்டித்தனர். எனவே, மூவர் மொழிந்த சமய நெறிகளில் உண்மை இல்லை என்பது தெளிவாகும்; இவர்கள் காட்டிய ஓட்டைப் படகாகிய மதத்தைப் பின்பற்றி வாழ்க்கைக் கடலில் இறங்கினால் நாம் அதோகதியாய்த் தான் அழிய முடியும்! ஒரு பலனும் கிட்டாது. இவர்கள் மதங்களும் தெய்வமும் உண்மையானால், இவர்கள் ஒருவருக்கு ஒருவர் மதம் பிடித்து மதப் போர் செய்து மடியவேண்டாமல்லவா? இன்றுள்ள இஸ்லாம், கிறிஸ்துவம், பௌத்தம், சமணம் போன்ற மதங்கள் தோன்றியும் நிலைபெற்றும் வாழ இடம் ஏற்பட்டிராதல்லவா?

"விரிவிலா அறிவினோர்கள் வேறொரு சமயம் செய்தே
எரிவினால் சொன்னாரேனும் எம்பிரார்க்கு ஏற்கும்"

என்றும்,

"யாதொரு தெய்வம் கொண்டீர்; அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாகனார்தாம் வந்தருள் புரிவர்"

என்றும்,

'வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட்டல்லால்
மாறுபடும் பொருள் இல்லை" என்றும்,

"அவர் அவர் தம்தம் அறிவறி வகைவகை
அவர் அவர் இறையவர் என அடியவர்கள்;
அவர் அவர் இறையவர் குறைவிலர்; இறையவர்
அவர் அவர் விதிவழி யடைய நின்றனரே"

என்றும்,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்;
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்"

என்றும் நீட்டி நெளித்துக் கூட்டிப் பலவாறு கூறும் இம் மதத் தலைவர்கள், தமக்குள் மாறுகொண்டு கலாம் விளைப்பதை எண்ணின், நாம் அவர்கள் அறியாமைக்கு இரங்குவதல்லது, அவர்களை நம்பிய பாமரப் பார்ப்பனரல்லாத மக்கள், வருணாசிரம அலகையின் வலிய பிடியுட்பட்டுக் கடவுட் பித்தம் தலைக்கேறிக் கல்லுக்கும் செம்புக்கும் காலம் எல்லாம் கொட்டியழுது, கால்வயிற்றுக் கஞ்சிக்கும் கதி காணாவிடினும், வடகலை தென்கலையால் வரும் பெரும்போரைப் பாராளும் மன்றம்வரை அழைத்துப்போய் அரிதின் முயன்று சேர்த்த பொருளையெல்லாம் குருக்களும், கோயிலும், கடவுளும், கோயில் தாசியும், கோர்ட்டும், கோர்ட்டு வக்கீலும் குறையாமல் உண்டு கொழுக்க விட்டு இறுதியில் ஒரு பலனும் காணாமல் தமக்குள் வெட்டி மடிவதை அல்லாமல் இத்தகைய இந்துமத உட்பிரிவுகளாலும் ஆச்சாரிய ஆரியப் பார்ப்பனர்களாலும் நம் பார்ப்பனரல்லாத பெருங்குடி மக்கள் பெற்ற பலன் ஊசிப்போன உளுத்தம் வடையைப் பிட்டுழித் தோன்றும் காரளவும்கூட இல்லை என்பதேயாம்!

ஆகவே, இத்தகைய இந்திய தேசத்திற்கே பெருமை ஈந்த எண்ணிலாப் பெருமைமிக்க புண்ணியாத்துமாக்களும் அவதார புருஷர்களும் உதித்த பார்ப்பனக் குலத்தைப் பழிப்பது—அலேதாவது உள்ள உண்மையை மறைக்காமல் உள்ளபடியே கூறுவது—எப்படி தருமமாகும்? என்? "தருமமாவது, மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும்" என்ற பரிமேல்அழகர் என்ற பார்ப்பன உரையாசிரியர் எழுதிய திருக்குறள் உரையை நய பாவங்களுடன் நன்கு கற்ற பின்பும், "பிராமணரின் ஜாதி, பேர் முதலியவற்றைச் சொல்லித் திட்டுகிற சூத்திரனையும், பிராமணர்க்குரிய வேதத்தை ஓதும் சூத்திரனையும், வேதஸ்மிருதிகளைத் தரும சாஸ்திரங்கள் என்றுணர்ந்து அதன்படி ஒழுகாத சூத்திரனையும் நல்லோரும் அரசரும் புறக்கணித்துக் கடுந் தண்டனைகள் கொடுத்து அடக்கவேண்டும்" என்ற மனுநீதி சாஸ்திரத்துத்துக்கு விரோதமாகப் பார்ப்பன சமுதாயத்தைப் பழிப்பது பாவமல்லாமல் தருமம் ஆகாதுதான்! நாமக்கல் கவிஞரின் நாவன்மையைக் கண்டு நாம் ஈண்டு வியப்படையாமல் இருக்கமுடியுமா?

இனி மற்ற உதாரண புருஷர்களின் உண்மையை, விரிவஞ்சிச் சுருக்கி வரைவோம்:

**ஸ்ரீஇராமகிருஷ்ணபரமஹம்ஸர்:**—இவர் வடநாட்டுப் பார்ப்பனர். 'கொடுமையே நிறைந்த இந்து மதத்தை, மிகவும் மேலானது' என மக்களுக்குக் கூறி வாழ்ந்தவர். ஒவ்வொரு மதத்திலும் ஒழுகி நின்றும் கபடமே உருவாகிய கண்ணன் காட்டிய வழியையே போற்றிக் காளியின் அருளால் யோகமுற்றிருந்த இவரால், இந்தியாவிற்கு எய்திய நன்மை மக்களுக்கு மதத்தில் ஏற்பட்ட ஒரு முழு மூட நம்பிக்கையேயாகும்.

**தயானந்தசரஸ்வதி:**— இவரும் வடநாட்டுப் பார்ப்பனரே. வேதத்தை நம்பாமல், மக்கள் அதன் கொடுமையைக் கூறிப் பார்ப்பன மதத்தைப் பரிதவிக்கவிட்டு வெளியேறுவதுணர்ந்து, வேதங்

களில் பிறரைத் தாழ்த்தி எழுதப்பெற்ற சூத்திரங்களுக்குத் தந்திரமாகப் பாஷ்யங்கள் எழுதினவர் இவர்! இவர்தம் சுய ரூபத்தைச் **சிவானந்த சரஸ்வதி** எழுதிய **மனுநீதி விளக்கம், மத விசாரணை** என்ற நூல்களில் விரிவாகக் காணலாம்.

**இரமண மகரிஷி:**— இவர், இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள **திருச்சுழியில்** பிறந்த வைதிகப் பார்ப்பனர். உலகிற்கு இவர் நல்கிய ஒரே பயன், ஒவ்வொருவரும் "நான் யார்?" என்று கேட்டுப் பார்த்து, அதன் வழி ஆராய்ந்து தன்னைப் பிரம்மம் என்று உணர்ந்து யோகம் பயிற்றிப் பேரின்பம் உறுவதுஆம். இம் முறையால் மக்கள் தங்களை மக்கள் என்றும் உணராமல் சந்தேகித்து நாட்டுக்குழைக்காமல், மேல்வீட்டுக்குழைத்துப் பாழ்படுவதேயாகும். இவரின் "நிஜ சொரூபத்தை" **ரமண மகரிஷியின் ரகசியம், ரமண விஜயம்** என்பவற்றில் அறியலாம் இவரைப்பற்றி, ஐகோர்ட்டு வரையிலும் ஒரு வழக்குத் தொடரப்பட்டதை மக்கள் அறிவர். புதுச்சேரியில் உள்ள **அரவிந்தகோஷ்** என்ற (ஐ சி. எஸ். அளவும் கற்றுத் தேசத்திற்கும் ஒருகால் உழைத்து, முடிவில் யோகப்பயிற்சியில் முழுகிவிட்ட) பார்ப்பனரின் உண்மை வடிவமும், அவரால் நாம் அடைந்த பயனும் காலங்கிடைத்துழிப் பின்னொருமுறை எழுதுவோம்.

**கடப்பை சச்சிதானந்த யோகீஸ்வரர், சுவாமி விவேகாநந்தர்** முதலிய முனிவர்களாலும், பார்ப்பனீயம் வளர்ந்த ஒரு பயன் தவிரப் பார்ப்பனரல்லாத மக்கட்கு யாதொரு பயனுமில்லை. **சுந்தானந்த பாரதியாரால்** தமிழ்மொழி சில நூல்களைப் பெற்றதேனும், அதைவிட ஆரியத்தின் ஆதிக்கத்திற்குத் தமிழகம் அடிமைபாக்கப் பட்டதே, கண்ட பலன்! இவர்கள் அனைவரும் பார்ப்பனரே!

'ஐரோப்பியரின் அதிசய மிகுந்த விஞ்ஞானமெல்லாம் வாண வேடிக்கை' என்று எளிதில் கூறிவிட்டு, 'விஞ்ஞானங்களை விருத்தி செய்துள்ள நாட்டவர் கண்ட நன்மைகள் என்ன!" என்று கேட்

கும் கவிஞரின் சொல்போல, மதம், சமயம், கடவுள், மோக்ஷம், என்பவற்றைப் பலபட விரித்துக் கூறி, சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நால்வழியாலும் இறைவனை அடைய வழி காட்டிய மூன்று மதாச்சாரிகளாலும், சமயாச்சாரிகளாலும், முனிபுங்கவர் களாலும் இன்றுவரை உலகம் அடைந்த பயன் என்ன? என்று நாம் கவிஞரைக் கேட்கிறோம்?

இகலோக வாழ்வில் எண்ணிலா நன்மைகளை ஈய வந்த விஞ் ஞானக் கலையால் எய்தாத சில செயல்களைக் கவிஞர் கூறுகிறார். அவை கீழே குறிப்பிட்டுள்ளன:—

"நீரில்லாமல் நிலம் பயிராச்சா?
பசுவில்லாமல் பால் கறந்தாரா?
உழவு இல்லாமல் உணவு தந்தாரா?
மந்திரம் செய்து மாங்கனி வந்ததா?
பசியில்லாமை பண்ணி விட்டாரா?
பிணியில்லாமை பெற்றுவிட்டாரா?
மூப்பில்லாமல் முடித்துவிட்டாரா?
மரணம் என்பதை மாற்றிவிட்டாரா?
இறந்தவர் தம்மை எழுப்பிவிட்டாரா?"

மேலே, கவிஞர் கூறியவற்றில், எவையேனும் ஒன்றையாகி லும் கடவுளைக் கண்டு அருள்பெற்றுக் கணக்கற்ற மக்களுக்குக் கதி மோக்ஷம் காட்டவந்த கருணாகரர்களாகிய **காந்திமகான்** முதல் கொண்டு **சங்கரர்** வரையில் அவதரித்த பார்ப்பனீய பக்தர்கள் சாதித்தார்களா? என்று கேட்கிறோம். விஞ்ஞானத்தாலாவது, பசியில்லாமையும், பிணியில்லாமையும், மூப்பில்லாமையும், மரண முற்றவரை சிறிதுகாலம் உயிர்க்கச் செய்வதும் போன்ற செயல் களில் ஓரளவாகிலும் வெற்றிபெற்று இருக்கிறோம். ஆனல் பார்ப்பனீயத்தை நிலைநாட்டிய இந்துமதக் கடவுள், முனிவர் முதலி யோரால், தொத்து நோயும், மதச் சண்டையால் அமைதியின்மை

யும், பெண்களை அடிமையாக்கியதும், வீண் பொருள் விரயமும் அறியாமையும் அகால மரணமும் பெற்றதல்லாமல், வேறு என்ன நன்மையை எய்தினோம்? எனவே, இம்ம(க்)காத்துமாக்கள் பிறந்து விட்டதற்காகவே பார்ப்பனீயத்தைப் பழிக்கக்கூடாது? (அங்ஙனம் அது பார்ப்பனீயக் கொடுமையின் உண்மையைப் பகர்தல்) என்பது நேர்மையா?

இனித் தேசபக்த சிகாமணிகளில், தலைசிறந்திருந்த ஒருவர் இருவரை மட்டும் (விரிவஞ்சி) ஆராய்வோம்

கவிஞர் காட்டிய உதாரண புருஷர்களில், பெரும்பாலோர் வடநாட்டுப் பார்ப்பனர்கள்! வடநாட்டார், தென்னாட்டாரைச் சுரண்டிப் பிழைக்கும் பிழைப்பும், தென்னாடு, வடநாட்டின் "சந்தை" ஆக அமைந்து வறுமை எய்தி, வடநாட்டுத் தலைவர்களையே போற்றிப் போற்றிப் பயன் பெறாமல் போனமைக்கும் சான்று நாம் பகர வேண்டியதில்லை. காங்கிரஸ் எடான **கல்கி, தந்தி, தமிழ்நாடு, இந்தியன் எக்ஸ்பிரஸ், தினசரி,** பிரசண்ட விகடன் முதலிய வெளியீடுகளே அதைப்பற்றி அடிக்கடி விளக்கி எழுதுவதே போதும். ஆயினும், நாமும் ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறோம். அகில இந்திய காங்கிரஸ் மன்றம் தோன்றிய நாள் முதல் இன்றுவரை, அதன் தலைவர்களாயிருந்த பெரியோர்களைச் சற்றுக் கூர்ந்து நோக்கின், 100-க்கு 3 பேர் உள்ள பார்ப்பனர்கள் 100-க்கு 60-க்கு மேல் தலைவராய் (மாநாட்டுத் தலைவராயும், ராஷ்டிரபதியாயும்) வந்திருப்பதும் தென்னாட்டாரில் மாநாட்டுத் தலைவர் ஆனவர் மிகச் சிலரே (ராஷ்டிரபதியாகத் தென்னாட்டுப் பார்ப்பனரிலும், இதுவரை ஒருவர்கூட வரவில்லை) என்பதும், அவர்களும், காலஞ்சென்ற சர். டி. விஜய ராகவாச்சாரியார், ஸ்ரீநிவாசய்யங்கார், சுப்பிரமணிய ஐயர்கள் போன்ற ஆரியப் பார்ப்பனரே என்பதும் தெளிவாகும். ஆகவே, எந்தத் தேசத் தலைவர்களாலும், பார்ப்பனரல்லாத சமுதாயம் எட்டுணையும் நன்மை பெறவில்லை என்பதும் வெளிப்படை. ஆதலின், ஒரு சிலரைப் பார்த்தாலே தேசத் தலைவராயிருந்த ஏனைப் பார்ப்பனர் விஷயமும் இப்படித்தானிருக்கும் என்பது தெளிவாகும்.

**வ. வே. சு. ஐயர்:**—இவ்வையர், எண்ணறக் கற்று எழுத்தறு வாசித்தும், பார்ப்பனர் உயர் ஜாதிக்காரர்கள் என்ற எண்ணம் எட்டுணையும் குறையாதவர். இவரே சேர்மாதேவி குருகுலப் போராட்டத்துக்கு மூல காரண புருஷர். காந்தியடிகளே அவரைச் சாந்தப் படுத்தியும், தன் ஜாதி ஆணவத்தை விடாதவர். இப்படிப்பட்டவரால் திராவிட சமுதாயம் இழிவும் இழப்புமே அடைந்தமை தமிழ் உலகம் நன்ருக அறிந்துள்ளது.

**சுப்ரமண்ய பாரதியார்:**—இவர் சீர்திருத்தம் விழைந்த பார்ப்பனர்; இவரே, 'பேராசைக்காரனடா பார்ப்பான்; பெரியதுரை என்னில் உடல் வேர்ப்பான் ........பிள்ளைக்குப் பூணூலாம் என்பான்—பணம் பிய்த்துப்பிடுங்கி மிகத் தின்பான்........'' எனவும், "தமிழ் நாட்டில் பார்ப்பனர்கள் புராணங்களையும் சாஸ்திரங்களையும் காட்டி ஈரத்தில் எருமைகளைப் போல உழலும் தமிழ் மக்களை ஏமாற்றி வாழ்ந்து வருகின்றனர்'' என்றும், பலவாறு பார்ப்பன சமூகத்தைத் தாக்கித் தாழ்த்தி மிகவும் கண்டித்துப் பேசுகிருர். பார்ப்பன சமுதாயத்தைப் பழிப்பது தருமம் அல்லவாளுல், **பாரதியார்** கண்டித்ததும் அதர்ம வழியில்தான் போலும்!

பரத கண்டத்தின் விடுதலை வீரரான வி. டி. சவர்க்காருங்கூட அந்தமான் சிறைவாசத்தின் பின், "மத்திய சட்ட சபையில் (டில்லியில்)'' இந்து மதத்தைத் திருத்தம் செய்யவும், பெண்களின் நலம் கருதி வந்த பல சட்டங்களையும் ஆதரிக்காமல் எதிர்த்துப் பேசிய **பாயீ பரமானந்தரின்** பக்தி மிக்க பரம சிஷ்யராய்த் தம் இன நலம் பேணிப் பார்ப்பன மதமாகிய இந்து மதத்தைக் காப்பாற்ற, **இந்து மகாசபையைத்** தாங்கி நின்ருர் எனின், வேறு என்ன நன்மையை ஆரிய தேசத் தலைவரிடமிருந்து நாம் எதிர் பார்க்க முடியும்?

**ராஜாராம் மோகனராய்:**—இவர் ஒரு சீர்திருத்தப் பார்ப்பனர் இவரும் ஹிந்து மதத்தை வன்மையாக் கண்டித்துப் பார்ப்பனீயத்

லைப் பழித்துள்ளார்; அதன் பயனாய், இவரே ஜாதிப் பிரஷ்டம் செய்யப்பட்டுத் தந்தையின் சொத்தை இழந்தும் வருந்தினர் எனின், பார்ப்பனரல்லாதார் பார்ப்பன மதத்தால் என்ன நன்மை பெற முடியும் என்பதை நீங்களே எண்ணிப் பாருங்கள்.

**சர். எ. சேஷைய சாஸ்திரியார்:**—பெரிய மடிசஞ்சிப் பார்ப்பனக் குடும்பத்தில் வந்த இவர், திருவனந்தபுரத்தில் சோம்பேறிப் பார்ப்பனர்க்குச் சோறு போடுவது தகாத காரியம் என்று அச் சமஸ்தானத்தில், வெகுநாளாயிருந்த ஊட்டுப் பெறைகளுக்குப் பூட்டுப் போட்டாராம். இப்படி ஒரு சாஸ்திரியாரும், (தீண்டாதாருக்குப் பாடுபட்ட **பாலகங்காதரத் திலகரும்**) ஒருகால் உண்மையில் தொண்டாற்றியிருக்கலாம்; அதனால் என்ன? இன்று **திருவண்ணமலை, காசி** முதலிய பல இடங்களில் நடந்துவரும் **"ஓயா மடங்கள்"** இன்றேனும் பார்ப்பனரல்லாத ஒருவருக்காகிலும் சோறு போடுகிறதா? எல்லாம் பார்ப்பனருக்குத்தானே பலகாரத் தோடு படைக்கப்படுகின்றன? எங்கள் **பெரியார் ஈ. வே. ரா.** அவர்கள், **காசியில்** சென்று கண்டது என்ன? தம்மோடு வந்த பார்ப்பனருக்குச் சத்திரத்திலே ராஜ உபசாரமும், தமக்குத் தெருவில் விழுந்த—அப்பார்ப்பனர் உண்டு மிஞ்சிய எச்சில் சோற்றுக்கு நாய்களோடும் பிச்சைக்காரர்களோடும் இட்டப் போட்டியில் கண்ட தோல்வியும் பசிப்பிணியுந்தாமே?

**திலகர்,** தீண்டாமை விலக உழைத்தாரே! தீண்டாமை இன்று முற்றும் ஒழிந்தா போய்விட்டது? 6 கோடி மக்களை இன்றும் ஹரிஜனங்களாகத் தாழ்த்தி வைத்திருக்கவில்லையா காந்தியடிகளும்? திருநெல்வேலியில் இன்று தீண்டாத மக்கள் இந்துமதத் தொல்லை பொறுமல் இஸ்லாம் மதத்தில் சேருவதும், இவ்வாறு டாக்டர் திரு. அம்பேத்காரும் மதம் மாறப்போவதாய் கூறியதும், எதைக் காட்டுகின்றன? இன்னமும் தீண்டப்படாதவர் உரிமைகள் பறிமுதலாக்கப்பட்டுப் பொதுவான கடவுளைத் தொழவும், கோயிலில் நுழையவும் ஆன உரிமையும், கல்விபெறும் வாய்ப்பும், உழைப்புக்கேற்ற

ஊதியமும், இழந்துதானே தாழ்த்தப்பட்ட மக்கள் தவித்து வருகின்றனர்? அவர்களில் காங்கிரஸில் சேராமல் என் தனித் தொகுதி கேட்கின்றனர்? எண்ணிப் பாருங்கள்! ஆட்டு மந்தைக்கு ஓநாயைக் காவல் வைப்பதுபோலல்லவா இருக்கிறது ஹரிஜனங்கட்கு ஆரியப் பார்ப்பனர்களான அனந்தாச்சாரிகள் தலைவராக இருந்து தொண்டாற்றுவது? எனவே, பார்ப்பனீயம் தீண்டாதவர்களை ஒரு பக்கத்தில் மட்டும் சிறிது தொட்டுக்கொண்டு உழைப்பது எதற்காக என்றால், பார்ப்பனீயத்தின்மேல் உள்ள பழியைக் கழிக்கும் தந்நல நோக்குடனேயே என்பது தெளிவாகும். இன்றேல், ஜாதியை ஒழிக்கக் கலப்பு மணம் செய்யுமாறு தோழர்கள் சி ஆர். ஆச்சாரியார், எ. எஸ். பஞ்சாபகேசய்யர் முதலியோர் சொற்பொழிவு ஆற்ற முன் வருவானேன்? இது நிற்க.

திரு. பண்டித மோதிலால் நேரு, ஜவஹர்லால் நேரு, சீதாராமையா, பட்டேல் போன்ற பார்ப்பனத் தலைவர்களைப்பற்றியும், ஆச்சாரியார், சத்தியமூர்த்தி, டி. எஸ் எஸ். ராஜன், சாம்பமூர்த்தி முதலிய பார்ப்பனத் தலைவர்களைப்பற்றியும், இன்றைய தமிழ்நாடு அறியுமாதலின் அவற்றைவிட்டு மேற்செல்லுவோம்.

சிவாஜி மன்னனுக்குத் தாதாஜிகான் தேவும், சந்திரகுப்தனுக்குச் சாணக்கியனும், வளர்ப்புத் தந்தையராய் இருந்ததால் ஏற்பட்ட பலன், பார்ப்பன மதமான இந்துமதம் பரப்பப்பட்டு அநீதி நிறைந்த ராம ராஜ்யத்துக்கு இங்கு வித்து ஊன்றப்பட்டதல்லாமல் வேறென்ன? பார்ப்பன ராஜ்யமான பேஷ்வாக்கள் ராஜ்யமும், சூழ்ச்சி மிக்க அரசியலை ஆரியர் கைக்கொள்ள உதவிய அர்த்த சாஸ்திரமுமே இவர்களால் பரதகண்டம் கண்ட பலனாகும். நிற்க.

மீண்டும் கவிஞர் சரித்திர ஏணியைத் தள்ளிவிட்டுச் சமய நூலேணியைக் கொணர்கிறார் தம் வாதத்திற்காதாரமாக. அதிலும் சற்று நாம் ஏறிப் பார்த்துவிடுவோம் இனி.

சமய குரவர்களான திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர் மூவரும் பார்ப்பனராம்; சந்தான குரவர் நால்வரில் அருணந்தி சிவாச்சாரியரும் உமாபதி சிவாச்சாரியரும் பார்ப்பனராம். எனவே பார்ப்பனரைப் பழிப்பது இவர்களைச் சேர்த்தே அவமதிப்பதாகுமாம். அது சைவர்களைப் புண்படுத்துமாம். எனவே, பார்ப்பனீயத்தைப் பழிப்பது தருமம் அல்லவாம்.

தோழர்களே, நாயன்மார்களில் ஒருவரான பார்ப்பனரல்லாத திருநாவுக்கரசரைப் பார்ப்பனீயம் எப்படித் தாழ்த்தி வைத்துள்ளது என்பதையும், ஏனை மூவரையும்எப்படி போற்றியுள்ளது என்பதையும் ஈங்குச் சுருக்கிக் கூறுவோம்.

**சம்பந்தர்:**—இவர் பச்சையான வைதீகப் பார்ப்பனர். சூழ்ச்சியிலே பலே பேர் வழி; [புனல்—அனல் வாதங்கள், நோய் தீர்ப்பது, ஆண் பனையைப் பெண் பனையாக்கியது முதலிய இவர் அற்புத செயல்களால் இவர் சூழ்ச்சியை அறியலாம்; இடமில்லாமல் அவற்றை ஈண்டு விளக்கவில்லை]

ஒவ்வொரு பதிகத்திலும் கடைசிப் பாட்டில் தம்மைப் பலவாறு, (திருநெறித் தமிழ்வல்ல ஞானசம்பந்தன், நான்மறை வல்ல ஞானசம்பந்தன் எனப் பலவாறு) தாமே புகழ்ந்து கூறிக்கொள்ளும் ஆணவ மலத்தினர்! ஈற்றுக்கடுத்த பத்தாம் பாடல்கள்தோறும் பௌத்தரையும், சாக்கிய சமணர்களையும் ["பொறியில் சமண்—வெற்றரை உழல்வார் பட்டைத் துவராடையர் வேடத்தார் 'அவர்கள் உரை கேளன்மின்—தட்டையிடுக்கித் தலையைப் பறித்துச் சமணே நின்றுண்ணும் பிட்டர்—மதியில்லவர் சமணர் புத்தர் சொல்மொழி பொருளாய் நினையேல்—அறிவது அறிகிலார் அமணர்—கட்டமண் கழுக்கள்—ஆதர் அமணொடு சாக்கியர்—வேத வேள்வியை நிந்தனை செய்து உழல் ஆதம்இல்லா அமணர்—அமணொடு தேரரை (புத்தர்) வாதில் வென்று அழிக்க"] என்றொழியாமல் வைவார். வாதில் தோல்வி யடைந்த பிற மதத்தினராகிய சமண

பௌத்தர்களைத் "துடிக்கத் துடிக்கக் கழுவேற விட்டுக் கொன்ற பெருமாள்" என அருணகிரிநாதர் அழகாக இவரை வருணிக்கின்றார். பெரியாராகிய—கிழவரான அப்பரைத் தன் பல்லக்கைச் சுமக்க வைத்தார். இத்தகைய கொடியவர் பார்ப்பனர் என்பதற்காக அளிக்கப்பட்டுள்ள பெருமையைப் பாருங்கள். இவர் வைதிகப் பார்ப்பனராதலின் 'பசுவேட்டு எரியோம்பி"ப் பல யாகங்களைச் செய்தார்; ஒரு யாகத்தில் பல ஆடுகளைக் கொன்றார். கடவுளால் முத்துச் சிவிகையும் பொற்றாளமும் பொருளும் பெற்றார். 3-வது வயதில் பாடத் தொடங்கிப் பதினாறாம் ஆண்டிலேயே தம் திருமணங் காண வந்த திருக்கூட்டத்துடனேயே இறைவன் ஜோதியில் கலந்து மோக்ஷமுற்றாராம். திறக்க முடியாத கதவை, தமிழரான அப்பர் தம் திறனால் பெரிது முயன்று 11 பாக்கள் பாடித் திறக்க, அதனை எளிதாக ஒரே பாட்டில் (திருமறைக்காட்டுக் கோயிலில்) மூடி வைத்தாராம்! கடவுளை மிகவும் மனமுருகி அப்பனாக வைத்துப் பாடினதாகவும், இவர் பாக்களில் செல்லுக்கு இறையானவை (இவர்தம் குறைந்த 1600; பதிகப் பாக்களில்) மிகவும் குறைவு என்று சொல்லப்படுகிறது!)

சுந்தரர்:—இவர் ஜாதி கெட்ட பார்ப்பனர் அதாவது பார்ப்பனராய்ப் பிறந்தும் அரசரால் வளர்க்கப்பட்டுக் கோயில் தாசிகளை மணந்தவர். அதனால் இவருக்குத் தூய பார்ப்பனரான சம்பந்தரை விடச் சிறிது பெருமை குறைகிறது. இவரை ஈஸ்வரனே தடுத்தாண்டதும் அன்றி இவர் மனைவியின் ஊடலைத் தீர்க்கத் தூதும் போனாராம். கடவுளைப் கேட்டே முத்தாரம், மூக்குக் கண்ணாடி, முப்போதும் நெய் விரவு கறி சோறு, மலை மலையாக நெற்குவியல், பொற்கட்டிகள், சேவகர்கள் எல்லாம் பெற்றாராம். இவர் கடவுளைத் தோழனாக வைத்துப் பாடுகிறார். ஒவ்வொரு பாட்டிலும் ஈற்றில் தம்மைப் புகழ்ந்து பாடிக்கொள்கிறார். இவர் பாடியவை 37 ஆயிரமாம். அழிந்தவை அதிகமாக 49000 பாடிய அப்பருக்கு அழிந்த அளவைவிடக் குறைவேயாகும்! பதினெட்டாவது வயதிலேயே இரண்டு பெண்களை மணந்து வாழ்ந்த இவரை சிவபெருமான்

வெள்ளை யானைமீதிவர்ந்து கைலாயம் வரும்படி அழைத்து மோக்ஷம் கொடுத்தாராம்!

**மாணிக்கவாசகர்:—** இவர் அமாத்தியர் என்ற தாழ்ந்த பார்ப்பனர் குலத்தில் பிறந்தவர். இவர் கடவுளைக் காதலனாக வைத்துப் பாடுகிறார். கோயில் கட்டும்பொருட்டுக் கொற்றவன் பொருளைக் கொள்ளை கொண்டவர். இவர்க்குக் கடவுள் வேலையாளாயிருந்து வைகையை அடைத்தும், பிரம்படி பட்டும், நரியைப் பரியாக்கியும், பரியை நரியாக்கியும், கற்றுச் சொல்லியாய் ஏடெழுதியும், நேரடியாய் ஆட்கொண்டாராம் வாதவூரரின் 32 வயதிலேயே! இவரும் பௌத்தமதத்தினரைத் தாக்கி வென்றிருக்கிறார். இவர் இவ்வுலக வாழ்க்கையில் பற்றற்றவர்.

**திருநாவுக்கரசர்:—** இவர் சிறந்த படிப்பாளியான பார்ப்பனரல்லாத வேளாளர். சமண நூல்களில் தலை சிறந்த புலமையுடன் இருந்தவர் பல பட்டங்கள் பெற்று! சமண மதம் பார்ப்பன மதத்துக்கு எதிரானதால், இவரைச் சைவ சமயத்தில் புகுத்தினால் ஒழிய இந்த மதப் பார்ப்பனீயம் அழிந்துவிடும் என்றறிந்து, ஈஸ்வரனே பக்தரின் வேண்டுகோட்கு இணங்கிச் சூலை நோய் தந்தும், சூலத்தைக் காய்ச்சிச் சூடு போட்டும் ஆட்கொண்டாராம்! பாவம்! கைலாயத்தின் உண்மை காணப் போய்க் கையும் காலும் தேய்ந்தது தான் இவர் கண்ட பலன்; 81 வயது கழித்தே மோக்ஷம் இவர்க்குக் கிடைத்ததாம். இவர் கடவுளை ஆண்டவனாகவும் தம்மை அடியவராகவும் வைத்துப் பாடுகிறார் இவர் மிகவும் அடக்கம் உடையவராய் இனியபாடலைப் பாடியும் வாழ்க்கையில் இறுதிவரை இன்னலே அனுபவித்திறந்தார்!

எனவே, பார்ப்பனரான மூன்று நாயன்மாரால் நாம் அடைந்தது என்ன? நீங்களே ஆய்ந்து கொள்ளுங்கள்! சைவ சந்தான குரவர்களும், கொடிய இந்து மதத்தின் உட்பிரிவாகிய சைவ சமயத்தைக் கட்டியே தம் வாழ்வைக் கடத்தியவராதலின்—சமயமும், கொடிய வருணாசிரம இந்துமதத்தின் ஒரு வடிவமே ஆதலின் இவ்வுலகுக்கு அவற்றால் பயனில்லை என்பது தெளிவாகும்! எனவே

தான் "ஆத்தமானுர் அயலவர் கூடி, நாத்திகம் பேசி நாத்தழும் பேறியவர்" போலவே, "விரதமே பரமாக வேதியரும் சாதமாகவே சாத்திரங் காட்டித் தந்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந் தனர் சமய வாதிகள்" என்று மாணிக்கவாசகரே கூறியுள்ளனர். ஆதலின், பார்ப்பனரான சைவ சமய சந்தான குரவர்களால் நாம் அடைந்தது மலேவே (மயக்கமே) அல்லாமல், தெளிவு ஒன்றும் இல்லையே! அன்றியும், "நிலையாமை வேதாந்தத்தை" நம்பி, இவ்வுலகக் கவலையை அடியோடு விட்டுவிட்டு—வெளியார்கள் இந் நாட்டைத் தம் விருப்பப்படிக் கொள்ளையடிக்க விட்டுவிட்டு—தாழ்ந்து மோக்ஷத்தை நம்பி மோசம்போனதுதான் இவர்களால் ஏற்பட்ட உருப்படியான பலன்; எனவே, இத்தகையோர் பிறந்த காரணத்தாலேயே ஒரு பெரும் சமூகத்தைக் கொள்ளையடிக்கும் ஒரு சிறு சமூகத்தைக் கண்டிக்காமல் இருக்கமுடியுமா? அப்படியிருப்பதுதான் தருமம் என்றால், அத்தருமம் நமக்கு என்றும் வேண்டாமே!

"ஆழ்வார்களில் சிலர் பார்ப்பனராம்; பார்ப்பனரல்லாத வேளாளரான நம்வாழ்வாரைப் பார்ப்பனரே தொழுகின்றனராம்; எனவே, பார்ப்பனர் பார்ப்பனரல்லாதாரை மதிக்கவில்லை என்ற சொல் எப்படி நிற்கும்?" என்று கேட்கிறார் கவி. சண்டாளனால் புத்தி கற்பிக்கப்பட்ட சங்கரரும், மெய்கண்ட தேவரால் புத்தி கற்பிக்கப்பட்ட அருணந்தி சிவாசாரியரும் வேறு வழியில்லாமல், வேண்டா வெறுப்பாய்ச் சண்டாளனையும் வேளாளனையும் அன்று தொழ நேர்ந்தனரேயல்லாமல், உண்மையாகவே பார்ப்பன சமூதாயம் பார்ப்பனரல்லாத சமுதாயத்தை மதிக்கவே இல்லை, இன்று வரையிலும்! அதுபோலவே, கால வித்தியாசத்தால், நம்மாழ்வாரை ஆரியர் தொழுவதும்! அது மட்டுமல்ல; பார்ப்பன மதத்தையே பரப்பிப் பெரும் புகழ் பெற்றவரைப் பார்ப்பனர் கொண்டாடுவது இயல்பேயன்றோ?

உண்மையில், பார்ப்பனர், பார்ப்பனரல்லாதாரை மதிக்க வேண்டுமானால், "பிறப்பினால் தாம் உயர்ந்தவர்" என்ற ஆணவத்தை ஒழித்துவிட்டு, கலப்பு மணமும், சமபந்தி உணவும் தாராள

மாக முன் வந்து சட்டப்படிச் செய்யவேண்டும். தீண்டாத—தாழ்த்தப்பட்ட மக்களும் தங்கள் (பார்ப்பனர் வந்துள்ள) உயர்ந்த நிலைக்கு வரும் வரையில் எல்லா வகையிலும் உழைக்கவேண்டும்! ஆனல், எங்கே நிகழ்கிறது இவ்வாறெல்லாம்?

1935 நவம்பரில் அகமதாபாத்தில் ஜானு என்ற கிராமத்தில், தீண்டாத ஜாதிப் பெண்கள் பித்தளைக் குடத்தில் தண்ணீர் கொள்ளும் அளவு முன்னேறி விட்டனர்" என்பதற்காகவும், "ஜெயப்பூர் சமஸ்தானத்தில், 1935-ல் சக்ரவாகக் கிராமத்தில் தாழ்த்தப்பட்டவர் விருந்தில், நெய் பரிமாறியதற்காகவும், அப்பெண்களையும் தீண்டாதவரையும், அடித்து நையப் புடைத்து, வெருட்டியோட்டிய செயலைத்" தோழர் டாக்டர் பி ஆர். அம்பேத்கார் பரிதாபத்துடன் எடுத்துக் கூறியிருக்கிறர்! ['ஜாதியை ஒழிக்க வழி" என்ற நூலில் 26-27 பக்கங்களைப் பார்க்கவும்] மலையாள நாட்டில்—வைக்கத்திலும்—ஜாதி இந்துக்களால், நாடார் சமுகமான ஈழவர்கள், தெருவில் நடக்கும் உரிமையும் இழந்து—குளத்தில் குளிக்கும் குடிநீர் எடுக்கும் உரிமையும் இழந்து—வருந்திய செய்திகளை நாம் மறந்துவிட்டோமா? ஹரிஜனங்களைக் கோயில்களில் விடுத்ததனுல் சனதனிப் பிராமணப் பெண்களும் மேடை ஏறிக் கூக்குரலிட்டது நம் காதில் இன்னும் ஒலிக்கவில்லையா?

'எண்ணிறந்த பிராம்மணரல்லாத சங்கீத வித்வான்களின் பக்தியிலும், பாட்டிலும், பக்க மேளத்திலும், நாதரூபமாக இன்னும் விளங்கி வருகின்ற தியாகையர்வாளும் ஒரு பார்ப்பனரல்லவா?" என்கிறர் கவிஞர்.

தியாகையர்வாள் பார்ப்பனரானதால்தான் தமிழ்நாட்டில் ராமன் கடவுளாக வணங்கப்படவும், திராவிட மக்களின் உயர்ந்த கடவுள் கொள்கைகளும், இனப் பற்றும், மொழிப் பற்றும், அறுபட்டொழியும் நிலை எய்திற்று. தமிழன் தன் இனிய இசைத் தமிழையே மறந்துவிட நேர்ந்த நிலையும் தியாகப் பிர்மாவின் சிருஷ்டி

தான். ஆனல், இன்றே தியாகையரைத் திராவிட மக்கள் புறக்கணித்துவிட்டு, தம் தாய்மொழியிலேயே பாடத் தொடங்கிவிட்டனர். எனவே, தியாகையர் பார்ப்பனராதலால் பார்ப்பனியத்தைப் பழிக்காதே என்பது சரியல்ல.

"இனி, தொல்காப்பியரையும், பரிமேலழகரையும், டாக்டர் உ. வே. சா. ஐயரையும் பார்ப்பனரின் குல திலகரென எடுத்தோதி, அவர்கள் தமிழுக்கு எவ்வளவு ஆக்கம் அளித்துள்ளனர்? அவர்களையும் பழிப்பதா?" என்கிருர் கவி.

"தொல்காப்பியர் பார்ப்பனரா?" என்பதே ஆராய்ச்சிக்கு உரியது. எனவே, அவரை உதாரணப் பொருளாகக் கூறுவது நேரியதல்ல. பரிமேலழகர் பார்ப்பனராயிருந்ததால்தான், திருக்குறளான தமிழ் மறைக்கு, வடமொழி நியாயம் பற்றிப் பல இடங்களில் உரை வகுத்துத் தமிழரை வருணசிரமத்துக்குப் பலியாக்கி விட்டார் என்பதை அவர் உரையைப் படித்தவர் தெளிவாக அறிவர். நாமும் எடுத்துக்காட்டாக இரண்டொன்று கூறுவோம்.

'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்,' "அழுக்காறு அவா, வெகுளி, இன்னச்சொல் நான்கும் இழுக்கா (கடிந்து) இயன்றது அறம்" "அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை." என்றெல்லாம் வள்ளுவர் தெள்ளிதின் உணர்த்தவும், அதற்கு மாருகப் பரிமேலழகர் '(ஒருகுலத்துக்கு ஒருநீதி உரைக்கும்) மனுநீதி முதலிய (வடமொழி) நூல்களில் விதித்தவற்றைச் செய்வதும் விலக்கியவற்றை ஒழிப்பதுமே அறமாகும்' என்று கூறித் தமிழகத்தை வருணசிரமத்திற்குப் பலி தருகிருர்.

அடுத்தபடியாக, வள்ளுவர், "மக்கள் பேறு" என்றே (ஆண் பெண் இருவருக்கும் பொருந்தப்) பொதுவாகத் தெளிவாக, 60, 61, 62, 63, 64. 65, 66, 68 முதலிய குறள்களில் கூறியிருக்கவும், பெண்கள் ஆடவர்க்கு என்றும் அடங்கி ஒழுகவேண்டும் என்ற வட

மொழி நியாயம்பற்றிக் (கன்னியானபோது தந்தைக்கும், மணமான போது கணவனுக்கும், கணவனிறந்த பிறகு தன் மகனுக்கும் அடங்கிப் பெண்கள் நடக்கவேண்டும் என்பது மனு ஸ்மிருதி விதி) அஞ்சாமல் "புதல்வரைப் பெறுதல்" என்ற அதிகாரத் தலைப்புடன் அவ்வாறே பொருள் எழுதுகிறார். இன்னும் பல உள. (திருவள்ளுவரும் பரிமேலழகரும் என்ற நூலில் காண்க.) டாக்டர் உ. வே. சு. ஐயரைப்பற்றி நாம் மிகவும் நன்றி பாராட்ட வேண்டியவர் ஆவோம், எனினும், அவரும் ஜாதி புத்தியுடனும் வடமொழியிலே மிகுந்த பற்றுடனும்தான் வாழ்ந்து வந்தார் என்பதற்குப் போதிய சான்றுகள் பல உள. அவற்றைத் தமிழ்ப் பொழிலில் 1941.ல் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் எழுதிய தமிழ்த் தாத்தாவைப்பற்றிய குறிப்பில் காண்க.

எனவே, பார்ப்பனர்கள் எல்லாத் துறையிலும் பார்ப்பனரல்லாதவரோடு மாறுபட்டுத் தனித்தே வாழ்வதும், சமயங்கிடைத்தபோதெல்லாம் பார்ப்பனரல்லாத திராவிடர்களைச் சாண்டுவதில் தவறுவது இல்லை என்பதும், பார்ப்பனரல்லாத சமூகத்தை ஆரியர் எந்தக் காலத்திலும் மதிக்கவே இல்லை, மற்றுத் தாழ்வு செய்தே வந்துள்ளனர் என்பதும் இதுவரை எழுதிய மறுப்புரையால் விளக்கமாகும்.

"நாகரிகம் அறிந்தவர்கள் ஒருவர் குலத்தைப் பழித்துக் குற்றம் சாட்டமாட்டார்கள்," என்று கவிஞர் கூறுகிறார்.

பார்ப்பனரல்லாதார் சமுதாயத்தை 1000 மேலாகவே பல வழியிலே தாழ்த்திக் குற்றங் கூறுவதோடு அன்றித் தண்டனையும் கொடுத்தும், கண்டித்தும், துன்புறுத்தியும் வருகிற பார்ப்பன சமூகம் நம் கவி சொற்படிப் பார்த்தால் "அநாகரீகக் கூட்டமே" என்பது விளக்கமாவதுடன், திருடுகிற கூட்டத்தைக் கண்டித்துத் தற்காப்புச் செய்துகொள்வதே நாகரிகக் கூட்டத்தாரின் 'வழக்கமாகையால், அவ்வாறு செய்யும் பார்ப்பனரல்லாதார் இயக்கமே நாகரிக இயக்கமும் ஆகும் என்பதும் பெறப்படுகின்றது!

கடைசியாகக் கவிஞர் நம்மை எச்சரிக்கிறார்:

"பார்ப்பனர்கள் அனைவரையும் ஏககாலத்தில் அழித்து விட முடிந்தாலும்கூட, இமயம் தொட்டுக் குமரிவரையிலும் இந்தப் பாரத நாட்டின் பெருமைகளுக்கு எல்லாம் காரணமா யிருக்கிற "பிராமணீயத்தை" எவரும் அழித்துவிட முடியாது; அழிக்க முயலவும் கூடாது"

தோழர்களே, பார்ப்பனீயம் இந்நாட்டில் எவ்வளவு ஆழமாக ஆணிவேர் செலுத்திச் செழித்து இருக்கிறது என்பதையும், பௌத்த—சமண—சார்வாக—இஸ்லாமிய—கிறிஸ்துவ மதங்களின் எழுச்சியால் எல்லாம் அழியாத பார்ப்பனீயத்தை, ஒரு சிறிய திரா விடர் கழகமா அழித்துவிட முடியும்? ஒருக்காலும் முடியாது என்ற திடநம்பிக்கையையும் எவ்வளவு தெளிவாகக் கூறுகிறார் பாருங்கள். அழிக்க முயல்வதும் கூடாதாம்! ஏன்? "அன்னிய நாட்டாருக்கு எல்லாம் அலுப்பு வந்தபோது அமைதியை நாடித் திரும்பிப் பார்ப்பது இந்திய தேசத்தைத்தானும்!" அப்படியானல் பார்ப்பனீயந்தான் பரதகண்டத்தில் அமைதியைப் பரப்பியிருப்ப தாகக் கவிஞர் எண்ணுகிறார்போலும்! ஆனல் உண்மையோ வேறு!

தளபதி சி. என். அண்ணாத்துரை எம். ஏ அவர்களின் அழ கிய சொற்களால் அவ்வுண்மையைக் கூறுகிறேன் கேளுங்கள்:—

"இந்து மதத்தின் பிறப்பிடம் என்று பெருமை பேசும் பரத கண்டத்திலே, 10 கோடி முஸ்லீம் மதத்தினரும், பலப்பல இலட் சம் கிறிஸ்தவரும் இன்று காணப்படுகின்றனரே. (இவர்கள் யாவ ரும் அரேபியாவில் உதித்தவர்கள் அல்ல; மேலை நாட்டில் பிறந்தவ ரும் அல்ல; நம் இந்திய நாட்டுப் பிறப்பினரே) ஏன் இந்து மார்க்கத் தின் எழில் அவ்வளவு பெருந் தொகையினரையும் வசீகரிக்க முடிய வில்லை? ஆண்டி, அப்துல்லா ஆனதேன்! பச்சை, பால் (Paul) ஆனதேன்? வேதபுராணாதிகளின் பிடியிலிருந்து இவர்கள் தப்பித்

துக்கொண்டது என்?" எனவே, உண்மையில் பார்ப்பனீயம் அமை திக்குப் பதில் அமளையும், பரிதவிப்பையும், குழப்பத்தையும், வறுமையையுமே தந்துள்ளது என்பது தெளிவாகவில்லையா?

"மூவேந்தரும், பாரி, சடையப்ப வள்ளல் போன்ற மூவேழ் வள்ளல்களில் பலரும், இளங்கோ, கம்பன், ஒட்டக் கூத்தன், புகழேந்தி, ஔவை முதலிய கவிஞரும், பிற்காலத்திய மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை, மாம்பழக் கவி முதலியவர் உள்ளிட்ட பலரும், அவர்களைப் போற்றிய தமிழ் நாட்டுக் குடிகளும், சொந்த அறிவில்லாமல் பிராமணர் சூழ்ச்சியினுல் ஏமாந்துபோன இழிவுடையவர்களே ஆகிவிடுகிறுர்கள்; அந்த நிலையை ஒப்புக்கொண்டால் பிராமணரல்லாதவர்களுக்கு அதைவிட அவமானம் வேறெதுவும் இல்லை" என்கிறுர் கவி. எப்பொழுது? "பிராமணர்கள் சூழ்ச்சிக்காரர்கள் என்றும், அந்தச் சூழ்ச்சியிலே பிராமணரல்லாதார் சிக்கிக்கொண்டு திகைக்கிறுர்கள்" என்று சொல்லப்படுவதை நாம் ஒப்புக் கொள்ளும்போது!

உண்மைதான்; மகிழ்ச்சிப் பெருக்கில் மறந்து தூங்கும்போது உள்ளே புகுந்த கள்வனுல் எவ்வளவோ பொருள் கவரப்படும்; கள்ளனுக்கு இடங்கொடுத்த நாம் அதனுல் இழிந்தவர் ஆகோம்; வீட்டிற்குத் தஞ்சம் என வந்த விருந்தாளிக்கு இடம் தந்து ஆதரித்தால், வந்தவன் வீட்டில் உண்டுறங்கி நடுவில் நம் நம்பிக்கைக்கு மாறுக இரண்டகம் செய்து, நம் வீட்டிற்கே அழிவு தேடினுல், அதனுல் விருந்தோம்பிய நாம் கீழ்மக்களாகோம்; மற்று, கள்ளனும், இரண்டகம் செய்த விருந்தாளியுமே கீழ்மக்களாவர். அதுபோலவேதான், தஞ்சம் என்று தமிழகம் புக்க பார்ப்பனீயத்துக்கு அஞ்சல் எனக் கூறி ஆதரவு தந்த தமிழர்கள், பார்ப்பனீயச் சூழ்ச்சியில் சிக்கித் தவிப்பதுமாகும்.

ஒரு குடம் பசுப் பாலில் விட்ட ஒரு துளி நஞ்சு, அக் குடப் பாலையும் பயனற்றதாய் — நஞ்சுள்ளதாய்ச் செய்துவிடக்கூடும் அதனால் அப் பசுப்பாலை அறியாது உண்ட மக்கள் நோய்கொண்டு தான் ஒழிவார்கள்; அதுபோல் கள்ளமற்ற வெள்ளை நெஞ்சில், ஆரிய நஞ்சில் ஒரு துளியேனும் ஏற்றுக்கொண்ட தமிழன், தன் பரந்த அறிவாலும் ஒரு பயனும் விளைக்கமுடியாமல் போகிறான். எடுத்துக்காட்டாகக் கவியரசர் **கம்பனின்** அறிவு "ராமபக்தி" என்ற ஆரிய மத போதனையால் கவரப்பட்டுத் தமிழரைக் காட்டிக் கொடுத்து, இனக்கொலை செய்யவே பயன்பட்டது அன்றோ? மகா **வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையின்** விரிந்த கவிவன்மை, புதிய சமுதாய கவிகளைப் பாடாமல் 17 தல புராணமும், 13 கடவுட் பிள்ளைத் தமிழ் நூலும் 5, 6 பதிற்றுப் பத்தும் பாடவே பயன்பட்டது அல்லவா? ஸ்தல புராணம், பிள்ளைத் தமிழ் நூல்களால் யாருக்கு என்ன நன்மை ஏற்பட்டது? எண்ணிப் பாருங்கள்.

ரிசர்வ் பாங்கி நிரம்பப் பணத்தைக் குவித்திருந்தாலும், பசியால் வாடும் பஞ்சை ஒருவனுக்கு ஒரு செல்லாத செப்புக் காசாவது— கட்டுக்காவல் என்ற ஒரு தடையிருக்கும்போது — கொடுத்துதவ முடியுமா? எனவே, கடவுள்—மதம் முதலிய பித்தம் ஊறிய தமிழர்கள் யாராயிருப்பினும், பார்ப்பனீயத்தின் பணியாளாகத்தான் வாழ முடியுமே ஒழியப் பார்ப்பனரல்லாதாருக்கு என்ன பயன் செய்ய முடியும்? தமிழர்கள் தம் அறிவுக்கலை முதலிய செல்வங்களைப் பறிகொடுத்துப் பரிதவிப்பதை யறிந்துதான் டாக்டர் நாயர், சர். பி. தியாகராயர் முதலிய பலவேறு பார்ப்பனரல்லாதாரும் ஒன்று சேர்ந்து, பார்ப்பனரல்லாதார் இயக்கம் ஒன்றை 1916-ல் தோற்றினர். 100-க்கு 97 பேருள்ள மக்களுக்குத் தமக்கென ஒரு பேரில்லாமல். பார்ப்பனரல்லாதார் என்ற பேரைக் கொள்வது கேவலமானது—விலங்கினத்தினின்றும் பறவையினத்தைப் பிரித்துக் காட்ட "விலங்கினமல்லாதவை" என்றும், ஆங்கில நாட்டு மக்களை "ரஷ்ய ஜெர்மானிய, இத்தாலிய, இந்திய, ஸ்பானிய, பிரான்சிய ......சீனர் அல்லாதார்" என்றும் அழைப்பதுபோலும் அறி

வுக்கு ஒவ்வாத முறை என்று அறிந்து தியாக சிகரம்—வைக்கம் வீரர், பெரியார் ஈ. வே. ரா. அவர்களின் தலைமையில் பார்ப்பன ரல்லாத மக்கள் தம்மைத் திராவிடர் என்று அழைத்துக்கொள்ள லாயினர்! இதில் தன்மதிப்பு மீண்டும் நிலைநாட்டப் பெற்றதே ஒழியத் தன்மானம் அழியவில்லை என்பதை அறிவுள்ள யாரும் அறிந்துகொள்வார்கள்!

"ஜாதி வேற்றுமையினாலும், மத வித்தியாசங்களினாலும் இந்த நாட்டில் இப்போது தீமையாக இருக்கின்ற ஏற்பாடுகளுக்கு எல்லாம் பழைய காலத்துப் பிராமணன் எவ்வளவு பொறுப் பாளியோ அவ்வளவு பொறுப்பாளி பிராமணன் அல்லாதானும்,... இந்தக் காலத்துக் கொடுமையாக இருக்கின்ற பழக்க வழக்கங் களை எல்லாம் அழிக்கவேண்டியது அவசியமே;..........ஆனால் பிராமணரும் பிராமணரல்லாதாரும் சேர்ந்து செய்துவிட்ட காரி யங்களுக்குப் பிராமணரை மட்டும் குற்றவாளிகளாக்குவது பெருங் குற்றம்" என்று வாதிக்கின்றார் நாமக்கல்லார்.

தோழர்களே, கவிஞர் தம்மையறியாமலேயே, "பார்ப்பனர் கூட்டுறவால் ஏற்பட்ட—பார்ப்பனரல்லாதார் இன்று பின்பற்றி யுள்ள—ஜாதி வேற்றுமையும் மத வித்தியாசங்களும் மிகவும் கொடுமைகளாக இருப்பதாகவும் அவற்றை அழிக்கவேண்டியது அவசியம்" என்றும் தெளிவாகக் கூறியதைக் கூர்ந்து நோக்குங்கள். இவ்வுண்மையைத்தான் சுயமரியாதை இயக்கம் 20 ஆண்டுகளாகக் கூறி வருகிறது. சுயமரியாதைக்காரன் சொல்லைக் கேட்பதே பாவம் என்று விலகிப்போய் அவர்களை நாஸ்திகர்கள் என்றும், தேச, மத, சமயத் துரோகிகள் என்றும் வைகின்ற நம் காங்கிரஸ் தோழர்கட்கு நாமக்கல் கவிஞரின் இச் சொற்களை எண்ணிப் பார்க்குமாறு சமர்ப்பிக்கின்றோம்.

நாமக்கல்லார் சொல்லை உண்மையாக ஏற்றுக்கொண்டால், ஜாதி மத பேதங்களை ஏற்படுத்திய வேதஸ்மிருதி புராணங்களையும்,

அதனுல் ஏற்பட்ட பார்ப்பனீய இந்து மதத்தையும், இந்துமதக் கடவுள்களேயும் உடனடியாக அழிப்பதே "அவற்றை அழிக்கவேண்டியுதின்" முதல் படியாகும். ஆகவே, பார்ப்பனீயத்தை அடிமுதல் நுனி வரையும், செத்தாலும் விடேன் என்று உடும்புப் பிடியாகப் பற்றிக்கொண்டு இருக்கும் பார்ப்பனர்களேப் பழிக்கும் நிலேயும் தானுகவே சேர்கிறது அல்லவா? ஆகவே, பார்ப்பனர்க்குப் பரிந்து பேச வந்த கவிஞரின் வாதம்— பார்ப்பனீயத்தை அழிக்க முயலவும் கூடாது என்ற வாதம்—முன்னுக்குப் பின் முரணுகத் தானே விழுந்து போதலேக் கூர்ந்து நோக்குங்கள்!

இனி, ஜாதி மத வேற்றுமையால் உண்டான தீமையான ஏற்பாடுகளுக்கு எப்படியும் பார்ப்பனரல்லாத திராவிடப் பெருங்குடி மக்கள் காரணமாகார் என்பதை விளக்குவோம். திராவிட சமுதாயத்தில் முன்னுளில்—ஆரியம் ஆட்சி பெறுமுன்—பிறப்பினுல் உயர்வு தாழ்வு கற்பிக்கும் வழக்கம் இருந்ததில்லே என்பதற்கும், தொழில் பிரிவினுல் வகுப்பு ஒற்றுமை ஏற்பட்டது என்பதற்கும் கீழ்க்கண்ட சான்றுகளே ஆதாரமாகும்.

"பிறப்பு ஒக்கும் எல்லா வுயிர்க்கும்"—திருக்குறள். "காதல் மணமே தமிழர் இயற்றியதாலும், வீரம் விரும்பியதாலும், வீர வாழ்க்கையும் காதல் மண வாழ்க்கையும் ஜாதி பற்றிப் பாகுபாடு நிகழாமல் அன்பின் வழி கலப்பு மணமாக நிகழ்ந்தன" என்பதற்கும், "கடவுள் நிலேயைப் பல சிக்கலில் புகுத்தாமல் இயற்கை இறைவனேயே வழிபட்டவர் தமிழர்" என்பதற்கும், "ஆரியக் கலப்புச் சிறிது நிகழ்ந்த பிறகும் கூட மத வேறுபாடுகளினுல் மக்கள் தமக்குள் பூசலிடாமல் ஒற்றுமையுடன் வாழ்ந்தனர்" என்பதற்கும், "அறிவினுல் மக்களின் சிறப்பு வேறுபட்டிருந்தது" என்பதற்கும் பலப்பல சான்றுகள் தொல்காப்பியம் முதலிய இலக்கணத்திலும் குறுந்தொகை, புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களிலும் காணலாம். எனவே, திராவிட மக்களே ஜாதி மத பாகுபாட்டில் பகுத்திக் கொடுமைக்கு ஆளாக்கியது சூழ்ச்சியில்வல்ல ஆரியமேயாகும்;

அதற்குத் தமிழர் தெரிந்து துணை செய்யவில்லை; வலை விரித்திருப்பது தெரியாமல் ஓடிச் சிக்கிக்கொண்ட மானினம், யானையினம் போல, ஆரிய வலையில் சிக்குண்டனர் என்பதே மெய்யாகும்.

"அன்னிய நாட்டை அடிமைப்படுத்தி
அடக்கியாளும் ஆசைக்காகச்
சண்டை தொடுத்தவன் தமிழன் அல்ல"

எனக் கவிஞரே வேறோரிடத்தில் கூறுவதுபோல், வெள்ளை நெஞ்சமும் பிறர்பாலிரக்கமும் உடைய தமிழனைப் பின்புறமிருந்து தாக்கி ஆரியம் அடிமை கொண்டதற்குத் தமிழனைக் குறை கூறுவது தவறாகும். அமைதியாகவும் தெளிவாகவும் இருந்த குளத்தில், நீர் அருந்துவதாகக் கூறிச் சென்று, வலைஞர் மீன் பிடித்து வாவியைக் கலக்கினால், அதற்குக் குளத்தைக் குறை கூறுவது தவறாகும்; குளத்தைக் குட்டிச் சுவராக்கிய வலைஞரும், அவர்களை அவர் நய வார்த்தையில் நம்பிக்கை கொண்டு உள்ளே விட்ட குளக் காவல்காரனுமே குற்றவாளிகளாவார்கள். அதுபோலவே, தமிழகத்தில் தஞ்சம் என்று வஞ்சனையையும் நஞ்சொத்த நெஞ்சினையும் காட்டாமல் மறைத்துவைத்துக் கொஞ்சியவாறு வந்த பஞ்சையான ஆரியத்தை நம்பி "அஞ்சல்" என ஆதரித்து விருந்தேற்றுபசரித்த அந்நாளைய செஞ்சொற் கவிஞர்களும், எஞ்சாத வீரமிக்க அரசர்களுமே குற்றவாளிகள்; இவர்களைவிட உண்ட வீட்டிற்கிரண்டகம் செய்த உலுத்தரான ஆரியர்களே பெருங் குற்றவாளிகளாவர்! எனவே தான், இன்றைய பார்ப்பனரல்லாத மக்களின் பண்புமிக்க தனிப் பெருங் காவலரான திராவிடர் கழகத்தினர், காட்டிக் கொடுத்த கவிஞர் நூல்களையும், அரசர்களின் ஆட்சியையும் இழித்து உரைத்து இரண்டகம் செய்து எய்த்த ஈன ஆரியப் பார்ப்பனீயத்தைக் கண்டித்து, அவர்கள் வலை நின்றும் மீண்டும் ஆரியக் கொசு இனியும் தமிழர்களைக் கடிக்காதிருக்கத் திராவிட நாட்டுப் பிரிவினையாகிய கொசு வலையை நெய்து வருகிறார்கள்!

"பார்ப்பனர் சொன்னதை எல்லாம் மற்றவர்கள் கேட்ட காலம் மலை ஏறி விட்டது; அப்படியிருக்கப் பிராமணரல்லாதாருக்குக் கெடுதலான என்ன சூழ்ச்சியைப் பிராமணன் இப்போது செய்ய முடியும்? அப்படிச் செய்தாலும், அதில் சிக்கி ஏமாந்து போகக் கூடிய அறியாமை, எழுத்து வாசனையில்லாத பிராமணரல்லாதவனிடம்கூட இப்போதில்லை!" என்கிறார் கவி.

பார்ப்பனர்கள் சொன்னதை யெல்லாம் மற்றவர்கள் கேட்ட காலம் இன்னும் மலையேறி விடவில்லை; ஆனால் மலையேறிக்கொண்டு வருகிறது. பார்ப்பனர் சொல்லுக்கு ஓரளவேனும் நாட்டில் மதிப்பில்லாமல் போனதற்குக் காரணம், ஏறத்தாழ 20 ஆண்டுகள் தமிழகத்தில் சுயமரியாதை இயக்கமும், ஜஸ்டிஸ் கட்சி என்ற தெ. இ. ந. உ. சங்கமும் முயன்று உழைத்து வந்ததும், அவ்வாறு வட நாடுகளிலும் பிராமண மத விரோதமாக ஏற்பட்ட பௌத்த சமண சீர்திருத்தவாதிகளின்—முஸ்லீம் — தாழ்த்தப்பட்ட இயக்கங்களின் உழைப்புமேயாகும் "அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்" என்பதுபோல், தொடர்ந்தாற்போல் பார்ப்பனீயத்தின் பட்டிமையை நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறி வந்ததனால், அதன் பயனாகப் பார்ப்பனீயத்தின் பக்தர்களான பார்ப்பனர் சொல் செல்வாக்கிழந்து ஓரளவு செல்லாக் காசுகளாயினவேயன்றி வேறில்லை. எனவே, பார்ப்பனீயத்தைத் தாக்கித் தற்காப்புச் செய்துகொள்ள பார்ப்பனரல்லாதார் ஒற்றுமைச் சங்கம் இன்றியமையாததாம் என்பது தானே விளக்கமாகும்!

அன்றியும், இன்னமும் பார்ப்பனர் சூழ்ச்சியில் திராவிட மக்கள் எளிதாக ஏமாந்து சிக்கித் தவிக்கவே நேர்கிறார்கள் என்பதை அறிஞர் எல்லாரும் அறிவர்! இதற்கு எடுத்துக்காட்டாக திராவிட மக்கள் இன்றும், திருமணம், இழப்பு, சூல்காப்பு, படிப்புத் தொடக்கம், பெயரிடல் முதலிய அன்றாட வாழ்வியல் துறை ஒவ்வொன்றுக்கும்

ஆரியப் பார்ப்பனரையே தலைவராய்க் காணிக்கை கொடுத்துக் காலில் விழுந்து அழைத்து வந்து சிறப்பித்து (தம்மை இழிவு செய்து) நடத்திக்கொள்வதும். கோயில் வழிபாடு, பொது ஊழியச் சங்க அமைப்பு முதலியவற்றிலும் பார்ப்பனத் தாசுரையே தலைவ ராக்கி அவர் சொற்படி விழாக்கள் செய்து பொருளை வீணாக்குவதும், தேசியத்தின் பேராலும், மதத்தின் பேராலும், கலைகளின் பெயரா லும் ஏமாற்றும் படித்த பார்ப்பனர்களின் பாதந் தாங்கிகளாய் ஏமாந்து தொண்டாற்றிப் பாழ்படுவதும் போதிய சான்றாகுமே!

திராவிடப் பெருங்குடி மக்களைக் கேவலமாகப் பல முறை பேசிய சத்தியமூர்த்தியின்பேரால் ஒரு தொழில் கல்லூரி ஏற்படுத் தப் போவதாகவும், அக் கல்லூரியில் ஜாதி மத பேதமின்றி மாண வர்களின் தகுதி ஒன்றையே பார்த்து மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளப்படும் என்றும், அதற்காகத் திராவிட மக்கள் பெரும் பொருள்தந்து ஆதரிக்கவேண்டும்'' என்றும் கூறும் தோழர் ஆச்சாரி யின் அரிய மூளையில் பார்ப்பனர்க்கு மேன்மையும், திராவிடர்க்குத் தீமையும் தரும் கெட்ட சூழ்ச்சி எண்ணம் இருக்கிறது பாருங்கள்! ஒரு மாணவனின் தகுதி, அவன் பெற்றோர்களின் கல்வி நிலை, செல்வ நிலை, சுற்றுச் சார்பு நிலை, நாட்டிலுள்ள செல்வாக்கின் நிலை முதலியவற்றை ஒட்டியே அமையும்; ஆயின், கணவனும் மனைவியும் ஒரு மொழிக்கு இரு மொழியாகக் கற்றுத் தேர்ந்தும், சமூகத்தில் உயர்ந்த பெருமையும், போற்றுதலும் உடையராய்ப்—பெரும் உத்தி யோகங்களில் உள்ளவராய்ச்-செல்வச் களியாட்டில் திளைப்பவராய் உள்ள பார்ப்பனப் பெற்றோர்களின் பிள்ளைகளின் தகுதியோடு, வறுமையும், சமுதாயத்தில் தாழ்ந்த இடமும், கூலி வேலையும், தாய் மொழியின் அறிவு (எழுதப் படிக்கவும்கூட) இன்மையும், மூட வழக்கத்தில் முழுப் பற்றும், உடைய திராவிடப் பெற்றோர்களின் பிள்ளைகளின் தகுதி எப்படியும் போட்டியிட முடியாதாகையால், பார்ப்பனப் பிள்ளைகளே சத்தியமூர்த்தித் தொழில் கல்லூரியில் சேர்க்கப்பட்டுத் தொழிலிலும் வல்லுநராய் எதிர்காலத் தொழில் உலகத்திலும் பார்ப்பனரல்லாத மக்களைச் சுரண்டிச் சுகமாக வாழ

வேண்டும்" என்ற தன்னினப்பற்றால் அல்லவா ஆச்சாரியாரவர்கள் அவ்வாறு கூறுகிறார்கள். அப்படிப்பட்ட சூழ்ச்சியிலும், அறிவில்லாமல் எத்தனைத் தமிழர்கள் சிக்கிக்கொண்டு, கஸ்தூரிபா நிதிக்குக் கணக்கற்ற பொருளைக் கொட்டிக் கொடுத்ததுபோலக் கொடுத்து ஏமாறப் போகிறார்கள் என்பதையும் பொறுத்திருந்து பாருங்கள்! திராவிடப் பெருமக்களின் நன்கொடையால் உண்டாக்கப்பெற்ற சென்னை விவேகாநந்தா கல்லூரியும், அண்ணாமலைப் பல்கலைக் கழகமும், வள்ளல் அழகப்பச் செட்டியாரின் நன்கொடைகளும், பிறவும் இன்றும் யாருக்கு நன்மை விளைவிக்கின்றன என்பதையும் எண்ணிப் பாருங்கள்! எனவே, கவிஞர் கூற்று உண்மையல்லவாதல் காண்க.

"பின் இச்சூழ்ச்சி எங்கே இருக்கலாம் என்றால் பிராமணரும், பிராமணரல்லாதாரும் வேறொரு மூன்றும் மனிதருடைய தயவை நாடி ஜீவனம் செய்யவேண்டிய இடத்தில் பிராமணருடைய சூழ்ச்சி பிராமணரல்லாதார் சூழ்ச்சியைக் காட்டிலும் ஒருக்கால் வெல்லக்கூடியதாய் இருக்கலாம்...... (அதுவும்) இந்த அரசாங்கத்தின் சம்பந்தமுள்ள இடங்களைத் தான் இந்தச் சூழ்ச்சிகள் சூழ்ந்துகொண்டிருக்கின்றன" என்கிறார் கவிஞர்.

மீண்டும் ஒருமுறை பார்ப்பனர் சூழ்ச்சி இருக்கத்தான் செய்கிறது என்றும், அச் சூழ்ச்சியுள்ள இடத்தையும் குறித்த கவிஞரை நாம் பாராட்டுகிறோம். ஆனால், 100-க்கு 3 பேரே உள்ள ஒரு சிறு கூட்டம் 100-க்கு 97 பேர் உள்ள பெருங்குடி மக்களின் உரிமையைப் பறித்து, 100-க்கு 60 பங்குக்கு மேலாக பங்கு பெற்றுச் சூழ்ச்சியுடன் வாழ்வது மட்டும் நேர்மையா? நீதியா? என்று கேட்கிறோம். காங்கிரஸ் ஆட்சியிலே, 11 மாகாணங்களுக்கு 7 மாகாணங்களில் முதலமைச்சர் பார்ப்பனராகவும், சென்னையில் 10 அமைச்சர்களில் 4 பேர் பார்ப்பனராகவும் வர முடிந்தது பார்ப்ப

ணர் சூழ்ச்சியால்தானே? இன்றைய காங்கிரஸ் மந்திரி சபையிலும் உள்ள பார்ப்பனீயப் "பதவி வேட்டை"க் கும்பலின் பட்டிமையைக் கண்கூடாகக் காண்கிறோமே! இதைக் கண்டிப்பது எப்படித் தவறாகும்?

மேலும் கவிஞர் கூறுகிறார்: "விவசாயத்திலோ, வியாபாரத்திலோ, கைத்தொழிலிலோ எவரும் எந்தச் சூழ்ச்சியும் செய்ய இடமில்லை" என்று.

உழவுத் தொழிலில் பார்ப்பனர் சூழ்ச்சி அதிகம் இருக்கிறது. நந்தன் சரிதம் இதை மெய்ப்பிக்கும். இன்றும், ஏர் பிடித்து உழும் பார்ப்பனர்களையும், ஏற்றம் இறைத்து நாற்று நட்டுக் களை பிடுங்கி இரவும் பகலும் கண்ணை இரண்டிமை காப்பதுபோலப் பயிரைக் காத்துக் கதிர் முற்றிய பின் அறுவடை செய்து தாளடித்துக் கதிரைத் தூற்றி மூட்டை தூக்கும் பார்ப்பனரை எங்கேனும் பார்த்திருக்கிறீர்களா? ஆனாலும், நாட்டிலே பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள்—நன்செய்யே மிகுதி—வளமான பூமிகளில், பார்ப்பனருக்கே சொந்தமாக உள. அநேக பார்ப்பனர்கள் இனாம்தார்கள், சிரோத்திரியதாரர்கள், பண்ணையாளர்கள் ஆக உள்ளனர். ஆனால், அவர்கள் நிலங்கள் எல்லாம் மோட்டு யந்திரங்களால் உழப்படவில்லை, அறுவடையாகவுமில்லை. மிகத் தாழ்ந்த நிலையில் ஆரியம் பிரித்து வைத்துள்ள ஆதித்திராவிட மக்களாலும், தாழ்ந்த சமூக மக்களாலுமே — அஃதாவது பார்ப்பனரல்லாத பாமர மக்களாலேயாம்—இவ் உழைப்பாளிகள் நெற்றி வேர்வையை நீரோடு பாய்ச்சப்பட்டு களைகளோடு பிறப்புரிமைகளை பிடுங்கப்பட்டு, அறுவடையோடு பகுத்தறிவும் அறுக்கப்பட்டு, தாளடிப்பதோடு சமுதாயத்தில் இழிவு அடிபட்டு, கதிர் தூற்றுவதோடு தன் மானத்தையும் மதக் காற்றில் தூற்றப்படவிட்டு, பதரை விலக்கி, எரிக்கவும் எருவாகவும் பயன்படுத்திக்கொண்டு, முற்றிய கதிரை மொத்தமாகப் பண்ணையாளர்க்குப் படியளப்பதோடு, தம் உடலுழைப்பையும் அளந்துவிட்டு, எஞ்சிய உடலை மேலும் ஆரியப் பயிர் செழிக்கவுமே பயன்படுத்தப்படுவதை

யாரறியார்? உழைக்காத ஆரியப் பார்ப்பனர் உயர்ந்த வாழ்வில் ஒய்யாரமாக இருந்து மேலும் மேலும் முன்னேற, ஓயாது உழைத்த திராவிட சமுதாயம் மேலும் மேலும் வறுமையில் வாடித் தாழ்ந்த வாழ்வில்தானே தவிக்கிறது?

வியாபாரத் துறையிலும் ஆரியப் பார்ப்பனீயம் திராவிடத்தைச் சுரண்டி வருகிறது என்பது உலகறிந்ததே! (தோழர் சி என்.எ.வின் "திராவிடர் நிலை" என்ற நூலைக் காண்க)

காங்கிரஸ் ஆட்சியும், 4 (இப்போது 8) மாவட்டங்களில் திராவிடரால் நடத்தப்படும் கள்ளுக்கடையை மூடி அதற்காகக் கலைக்கூடங்களையும் மூடிவிட்டுப் பல வரிச் சுமைகளையும் ஏற்கனவே இடுப்பொடிந்து கிடக்கும் திராவிடன்மேல் சுமத்தியதே ஒழியப் பார்ப்பனரால் நடத்தப்படும் — * அறிவு நூல்களின்படி நோய் செய்வதான காப்பிக் கடைகளுக்கு—ஒரு 'லைசென்சாவது' வாங்கும்படி ஒரு சட்டமும் ஏற்படுத்தாமல் போனதுமன்றியும், வடநாட்டு ஆரிய அடிதாங்கிகளான மார்வாரிகளுக்குத் தமிழ் நாட்டில் வந்து வாணிபம் செய்யப் பல சலுகையும் காட்டி, இந்தி மொழியையும் கட்டாயப்படுத்தவில்லையா? இன்றைய "பிரகாசம் மந்திரி சபை" யும் வடநாட்டு முதலாளி பிர்லாவுக்கு 'வனஸ்பதித் தொழிற்சாலை' நடத்த உத்தரவளித்துள்ள அநீதியையும் இங்கு உங்கட்கு நினைவூட்டுகிறோம்.

கைத்தொழில் முறையிலும்கூட, நம் திராவிட மக்களுக்கு ராட்டையும், தக்ளியும், ராமராஜ்யத்துக்கு ராஜீய பாதையாகும் என அமிழ்தொழுகக் கூறிவிட்டு, வடநாட்டுத் தேசத் தலைவர்களும் ஆரிய முதலாளிகளும், பலப் பல கடைகளும் மில் யந்திர சாலைகளும் வைத்து நடத்தி, அவற்றில் வெளியாவதை எல்லாம் திராவிட மக்களின் தலையில் விற்பனை செய்து சுமத்தவில்லையா? பஜாஜுகளும், பிர்லாக்களும், டாட்டாக்களும், சேருக்களும், மார்வாரிகளும் தமிழ்நாட்டைச் சுருட்டி விழுங்கிவிடும் அளவு பெரும்

* "சுதந்திரா" (ஆங்கில வாரப் பத்திரிகை) தொகுதி 1, பகுதி 30, பக்கம் 48 ஒப்பு நோக்குக.

கோடீஸ்வரர்களாய் நம்மைச் சுரண்டுவதைப்பற்றி, ஆரிய ஏடான கல்கியும், தந்தியும், மற்றும் சில காங்கிரஸ் வெளியீடுகளும் கண்டித்து எழுதவில்லையா? எனவே, எப்படித்தான் திருப்பித் திருப்பிப் பார்த்தாலும், ஆரியத்தின் விஷம் ஒவ்வொரு துறையிலும் ஊறித் திராவிடரை நொய்ந்த மக்களாக மாற்றி வைத்திருக்கிறது என்பதே உண்மை; அதனால்தான் கவிஞரும் 'ஆரியம் அழியாது'' என்கிறார்.

இனி பிராமணரல்லாதாரில் சில படித்தவர்களே, பிராமணரைப்போல் உத்தியோகத்தில் பங்குபெற விரும்புவதற்காகவே, இப்பார்ப்பனரல்லாதார் சங்கம் முயல்வதாயும், அதற்கு, முன்னமே உத்தியோக வேட்டையில் வெற்றிபெற்றுப் பெரும் பதவியில் உள்ளவர்கள் தடைக்கல்லாக நிற்கிறார்கள் என்பதையுமே "பிராமணர் சூழ்ச்சி'' என்பதற்குப் பொருளாகக் கவிஞர் கூறுகிறார்!

'இந்திய நாட்டுக்கே பெருமையளித்த பார்ப்பன சமுதாயம்' இப்படிப் பிறர் முன்னேற்றத்தைத் தடுப்பது, அதன் பெருமைக்குப் பொருத்தமான செயலா? என்றுதான் நாம் கேட்கிறோம். இதைத்தான் "பிராமணத் துவேஷம்'' என்று ஆரிய அடிவருடிகள் வருணிக்கின்றார்கள். எது எப்படியிருப்பினும் மேலே கூறியவற்றால், பார்ப்பனர் ஆங்கிலத்தை முந்திக்கொண்டு கற்று, ஆங்கிலரின் தயவால் நல்ல நல்ல பதவிகளில் தம்மின பந்து மித்திரர்களோடும் ஒட்டிக்கொண்டு, பார்ப்பனரல்லாத நமக்குத் தடையாக உள்ளனர் என்ற உண்மையையாவது கவிஞர் எடுத்துக் கூறியதற்கு நாம் அவரைப் பாராட்டுகிறோம்!

இப்படிப் பதவிப் பித்துக்கொண்ட கலாசாலைப் படிப்புள்ளவர்கள் ஜனத்தொகையில் ஐந்து லக்ஷமாம். இவர்களே பார்ப்பனர்கள் சூழ்ச்சியில் சிக்கியிருக்கக்கூடிய நிலையினராம்; "மற்று 35½ கோடி மக்கள் உள்ள இந்த நாட்டில், இவ் 5 லக்ஷம் போக மிகுதி 35

கோடியே 45 லக்ஷம் மக்கள் எந்தச் சூழ்ச்சியில் சிக்கிக்கொண்டிருக்கிறார்கள்!" என்று கடாவுகிறார் கவிஞர்.

கணக்கிலே, கவிஞர் கலாசாலையில் கற்றபோதே கசப்புடையவராம். எனவே, அப்படிப்பட்ட கவிஞர் கணக்குப் போட்டுப் புள்ளி விவரத்துடன் வாதாடும் இச்சேதியை நாம் எண்ணிப் பார்க்க வேண்டியதில்லை. ஆயினும் வாதமாதலால் மறுப்போம்.

"அன்பையே போதிக்கின்ற மதங்களின் பெயரால்தான், இந்தப் பாதகங்கள் செய்யப்படுகின்றன; மத வெறியால் இந்த உலகத்தில் நடந்திருக்கிற அநியாயங்களுக்கு அளவே இல்லை. அவற்றை நினைக்கின்றபோது மதங்களும் கோயில்களும் அழிந்துபோனாலும் பாதகமில்லைதான் என்ற ஆத்திரம் நமக்கு உண்டாவதில் ஆச்சரியம் இல்லை" என நாமக்கல் கவிஞரே நவில்கிறார் வேறோரிடத்தில். "ஆனால், மதமும் கோயிலும் பாதகங்களுக்குக் காரணமல்ல" என்றும், 'மக்களுக்கு அஹிம்சையில் நம்பிக்கையின்மையும் ஹிம்சையில் உள்ள நம்பிக்கையுமே காரணம்" என்றும் கதைக்கிறார் கவிஞர்.

உண்மை அதுவல்ல; உலக மக்கள் எல்லாரும் ஹிம்சிப்பதை வெறுக்கிறார்கள். அஹிம்சையையே—அதாவது அன்பையே உலகம் என்றும் விரும்புகிறது. ஆனால், ஏன் இந்த அட்டூழியங்கள் நடக்கின்றன? என்றால், உலக மக்களுக்குக் கடவுள்பேரிலும் மதத்தின்பேரிலும் ஏற்பட்ட—இல்லை—ஏற்படுத்தப்பட்ட ஒரு முழு முட்டாள் நம்பிக்கைதான் இதற்குக் காரணமாகும்; இதனை வலியுறுத்த

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து இத்
தரணியொடு அவ் வானாளத் தருவரேனும்
இங்கவரை ஒருபொழுதும் மதிக்க மாட்டோம்!
... ... ... ... ... ... ... ...
அங்கமெலாம் தொழுநோயால் புழுத்திட்டாரெனும்,
எம் ஈசனுக்கு அன்பராகில், அவர் கண்டீர்
யாம் வணங்கும் கடவுளாரே!"

என்பன போன்ற கருத்து அடங்கிய ஒவ்வொரு மதத்தினரும் உரைத்த பாக்களை ஈண்டு நினைப்பூட்டுகிறோம்.

அம்மட்டோ! தாயைப் புணர்ந்து தந்தையைக் கொன்றாலும், தந்தையின் தாளைத் தடிந்து பசுப் பாலை மண்ணில் ஊற்றினாலும், அடியார்களுக்குப் பெண்டாட்டியைக் கூட்டிக் கொடுத்தாலும் ஈசனை நம்பினால் திண்ணமாக மோக்ஷம் உண்டு என்பன போன்ற மடமைமிக்க கருத்துக்களை நம்பி வாழ்வதே மதத்தைப் போற்றும் கடமை என்று மக்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. சைவனோ சிவம் முதல் தெய்வம் என்றும், வைஷ்ணவனோ மால் முதல் இறைவன் என்றும், ஒரு மதத்தை பிற மதத்தார் தழுவினால் பாபம் என்றும், மக்கள் கொண்டுள்ள ஆபாசமான அறியாமைக் கருத்தினால் சமுதாயம் கட்டப்பட்டிருக்கிறது.

மேலும், "வழக்கம், வழக்கம், பழக்கம் என்றெலாம் இழுக்கம் மிகுந்த எதையும் செய்து, சமுதாயத்தைச் சாக்கடையாக்கிச் சேற்றில் புரளச் செய்து" விட்டிருக்கிறார்கள். இப்படியெல்லாம் நிகழ்ந்ததற்குச் சரித்திரம் கண்ட ஒரே காரணம், பார்ப்பனீயத்தின் கொடுமையான இந்து மதமேயாகும்! பார்ப்பனீயக் கொடுமையைச் சகியாமல்தான் சமண புத்த மதங்கள் எழுந்தன. இந்து மதத்தின் இரக்கமற்ற தன்மையை வெறுத்தேதான் மக்கள் முஸ்லீமாகிறார்கள்; கிறிஸ்துவராகிறார்கள். எனவே, பார்ப்பன ஆரியரால் பரத கண்டத்தில் பரவிய இந்து மதத்திலும், எண்ணற்ற கடவுள்களிலும், சமயங்களிலும்; கோயில் புராண இதிகாச வேத வேதாகம சாஸ்திரங்களிலும், பார்ப்பனீயத்திலுந்தான் 35 கோடியே 45 லட்சம் மக்கள் தம்மை யறியாமலே சிக்கிப் பரலோகத்துக்குப் பாடு பட்டுப் பார்ப்பானுக்குப் பணிசெய்து பாழ்பட்டு வலையிற் சிக்கிய மான்போலும்—தூண்டிலிற் சிக்கிய மீன்போலும் இறந்தும் இறவா நிலையில் நடைப் பிணங்களாய், வெளிநாட்டார்கள் பரிகசிக்கும் நிலையில் வாழ்கிறார்கள்!

"அந்த 5 லக்ஷம் உத்தியோகங்களும் பிராமணரல்லாதாருக்கே வந்து விடுவதாக வைத்துக்கொள்வோம்; அதனால் மீதியுள்ள பிராமணரல்லாதாருக்கு என்ன நன்மை ஏற்பட்டு விட முடியும்?" என்கிறார் நாமக்கல் கவிஞர்.

நாம் கேட்கிறோம், பாரத கண்டத்துள்ள சுமார் 50 கக்ஷிகளில் ஒன்றான காங்கிரஸ் மன்றம், ஆட்சியைக் கைப்பற்றி ஆளுவதாக வைத்துக்கொண்டால், அக்கட்சி ஆட்சியால் ஏனைய 49 கட்சிகளுக்கு என்ன நன்மை ஏற்படும்? சென்ற காங்கிரஸ் ஆட்சியால் எதிர் கட்சிகளும், மக்களும் எவ்வளவு கேவலமாக நடத்தப்பட்டனர் என்பதை எண்ணிப் பாருங்கள்; கவிஞர் கூறுவதுபோல; பார்ப்பனீயத்தைக் கண்டிக்காமல் இருப்பதனாலோ, அல்லது பார்ப்பனப் பாசறையாகிய காங்கிரஸே ஏகபோக உரிமையோடு ஆளுவதாலோ [அவ்வாறு ஆண்ட காலத்திலுங்கூட] நிலவரிச் சுமையைக் குறைக்க முடியுமா? (முடிந்ததா?) "கள்ளுக் கடையால் வரும் கஷ்ட நஷ்டங்கள்" எல்லா மாவட்டங்களிலும் நிரந்தரமாகப் போக்க முடியுமா? (முடிந்ததா?) வியாபாரிகளுக்குவிற்பனை வரி, புகையிலை வரி, முதலிய வரிகளைப் போடாமலாவது இருக்கமுடியுமா? (முடிந்ததா?) கைத்தொழிலை விரிவுறச் செய்து கண்டிக்குப் போய் கண் கலங்கும் மக்களைப் போகாதவாறு தடுத்துத் தாய்நாட்டில் வேலை கொடுக்க முடியுமா? (முடிந்ததா?) கார்டு கவர்களைக் குறைந்த விலையில் குறைத்து விற்க முடியுமா? (முடிந்ததா?) என்று சிந்தித்துப் பாருங்கள். இன்றைய காங்கிரஸ் ஆட்சியிலும் இவை முடியவில்லையே!

பார்ப்பனப் பாசறையான காங்கிரஸ் ஆட்சி வந்து விட்டால், 'தெருவெங்கும் தேனாறு ஓடும்' என்றும், 'மக்கள் பூரண அமைதியில் வாழ்வார்கள்' என்றும், "வரிச்சுமை நீக்கப்படும்" என்றும் வானதிரும்படிப் பலவாறு புகழ்ந்து வாய்ப் பந்தல் போட்ட வாய் வீச்சு வீரர்களால் 2½ஆண்டு காங்கிரஸ் பார்ப்பன ஆட்சியில் என்ன

நன்மை செய்ய முடிந்தது? மக்கள் கொதித்தெழுந்த ஒரு பலனைத் தவிர! இன்றாவது மக்கள் விரும்பும் ஆட்சி நடக்கிறதா?

சின்னாள்முன் தோழர் ஆச்சாரியார் அவர்கள், 'பட்டேல், சீதா ராமையா, நேரு போன்ற தலைவர்கள் ஆட்சியில் இருந்தால் பித்தளை யும் பொன்னாக மாறும்' என்று மயக்கு வார்த்தைகளைக் கூறி மக்கள் மனதைக் கவர்ந்தாரே! எதற்காக? பித்தளை, பொன்னாவது மேற் பூச்சால் இருக்கலாம் இரச வாத வித்தை சட்ட விரோதமானது; வெற்றிகரமாகச் செய்யமுடியாதது. எனவே.பார்ப்பனீய ஆட்சியும், வெறும் மேற்பூச்சு ஆட்சியாக இருக்குமே ஒழிய—அல்லது இன் ஷறய ஆட்சியினும் மிகக் கொடிதாக இருக்குமே தவிர வேறு எப் படியிருக்கும் ராமராஜ்யம்? பித்தளை எல்லாம் பொன்னானால். பொன் னின் மதிப்பு பித்தளையின் நிலைமையவிட உயராது; பித்தளை நிறைய வும் பொன் சிறிதுமாகக் கிடைப்பதால். எனவே, இயற்கையான பொன் போன்ற தமிழராட்சி கேவலமாக்கப்படும் என்று தானே அதற்குப் பொருளாகிறது. இன்று திரு. சி ஆர். கூறியதுபோலவே நடக்கின்றன?

இன்று இந்தியாவினிடம் இரக்கமுள்ள தொழில் கட்சியினர் இங்கிலாந்தில் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியிருப்பதால், என்றுமில்லாமல் இனிமேல் மட்டும் இந்தியாவுக்கு நன்மையாக ஒரு சுதந்தர வழி ஏற்பட்டுவிடும் என்றே என் எல்லாத் தேசத் தலைவர் முதல் வட நாட்டில் உள்ள ஒரு வண்டிக்காரன் வரையும் நம்பி மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்துத் தொழிற் கட்சியின் வெற் றிக்கு மகிழ்வும் வாழ்த்தும் தெரிவித்து வரவேற்று மாலை சூட்டி னார்கள் என்பதைக் கவிஞர் சிந்தித்துப் பார்க்கட்டும்! உண்மை அப்போதாவது விளங்கும். நம்மிடம் அன்புள்ளவரால் நமக்கு நன்மையே தவிரத் தீங்கு நேராது என்ற துணிவால்தான் எங்கும் யாவரும் நண்பரின் நலனை விரும்பிப் போற்றுகிறார்கள். அது போலவே, பார்ப்பனீயம் பார்ப்பனரல்லாத மக்களுக்குப் பரம சத் துருவாய்ப் பிறவிப் பகைமை பாராட்டுவதால், அதனால் திராவிட

ருக்கு ஒரு நன்மையும் இல்லையே தவிர, பார்ப்பனரல்லாதாருக்காகத் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்று பாடுபட்ட திராவிடர் கழகமோ, தன்மதிப்பியக்கமாகிய சுயமரியாதை இயக்கமோ, எல்லாப் பதவிகளிலும் இல்லாவிட்டாலும், அதற்கு உரியதான பங்குத் தொகையளவு உள்ள பதவிகளில் இருந்தாலும் போதும். திண்ணமாகப் பார்ப்பனரல்லாத மக்களுக்குரிய பிறப்புரிமைகளையும் தந்து, முன்னேற்றிச் சென்று முழு விடுதலை யளித்து, உலகத்துள்ள பிற நாட்டவர்க்கு எவ்விதத்தும் தாழாத அளவில் சமதரும ஆட்சியை நிலைநாட்டி நலம் புரியும் என்பது நிகழப் போகும் உண்மையாகும்.

இன்று திராவிடரையே இழித்துப் பேசும் பார்ப்பனீயம் நன்கு கருத்தில் வைத்து அதன் நன்மையைக் கோரித் திராவிட மக்களின் இன எழுச்சிப் பாதையில் நின்று, வீணே வீறு பேசித் தடை செய்யாமல் விலகி ஒழுகுவது, எல்லார்க்கும் நல்லது. இன்றேல் பார்ப்பனீயப் படகு உரிமையிழந்து கொந்தளிக்கும் திராவிடப் பெருங் கடலில் எழும் சூறைக் காற்றில் அகப்பட்டு, உருத் தெரியாமல் உடைக்கப்பட்டுச் சிதறி ஒழிந்து போகும் என்று நாம் இப்போதே முன் கூட்டி எச்சரிக்கிறோம்.

பிராமணரல்லாதவர் எவ்வளவு நல்லவராக இருந்தாலும், பார்ப்பனீயத்தின் சூத்திரக் கயிற்றில் தொங்கும் பாவையாக உள்ளவரையும், கவிஞர் கேட்கும் நலங்களைச் சிறிதும் பார்ப்பனீயத்திற்கு எதிராகச் செய்ய முடியாது என்பதையும் நாங்கள் உணர்ந்திருக்கிறோம்.

எடுத்துக்காட்டாக, "மடத்தின் ஆஸ்தியெல்லாம், மடாதிபதிகளால் மாபெரும் பாதகச் செயல்களில் சரியாக்கப்படுவதால், "மடத்தின் ஆஸ்தியெல்லாம் பொதுவில் மக்களுக்கு ஆக்கிவிடவும்," அழகிய பெண்கள்—தாலி அறுந்துவிட்ட பின்னர் அழுகிய பழத்

தோலாய்ச் சமுகம் காலின் கீழ் மிதித்து வீசியெறிந்து விடுவதால், பெண்களுக்கு வைதவ்யக் கொடுமையை ஒழிக்க, இளம்பெண் கிழவன் மணம், மனம் பொருந்தா மணம், முதலியவற்றை நீக்கிக் கலப்பு மணம், காதல் மணம், விதவை மணம் முதலியவற்றைச் செய்யவும், பெண்கள் பிறப்புரிமையைக் காப்பாற்றப் பெண்கட்குச் சொத்துரிமையும் விடுதலையும் நிலையுயர்வும் தரக்கூடிய சட்டங்களையும், மாதர் சமூகத்தைப் பாழ்படுத்தும் பொட்டுக் கட்டும் வழக்கம் ஒழிக்கவும் தக்க சட்டங்களையும் கொண்டு வரவும், கோயில்களைத் தாழ்த்தப்பட்டவர் எல்லோருக்கும் திறந்து விடுத்து, எல்லோரும் பிறப்பினில் உயர்வு தாழ்வு இல்லை என்று சட்டம் வகுக்கவும், விரும்பி அவ்வப்போது பார்ப்பனரல்லாதார் நலம் விரும்பும் பதவியாளர்கள் மூலம் மத்திய சட்ட சபையிலும், மாகாண சட்ட சபையிலும் திட்டங்கள்கொண்டு வருகிறோம் ஆனால் ஆரியத்தின் "எஜண்டுகள்" மேலிடங்களில் இருந்து அப்படிப்பட்டவற்றை நிறைவேற்றவும் விடாமல், அத்தகைய கருத்துக்களையே கருவிலேயே உருவாகாதபடிக் கொலைசெய்தும் விடுகிறார்கள். மீறி உள்ளே புகுந்து "கருவினுருவாகி வந்து வயதளவிலே வளர்ந்து" விடும் ஓரிரண்டு சட்டங்களும், சாரதா சட்டங்களைப்போல் நடைப்பிணமாய், எட்டுச் சுரையாய், காட்டுக்குப் பயனின்றிப் போய்விடுகின்றன! எனவேதான் பார்ப்பனீயத்தை ஒழிக்காதவரையிலும் எந்த நன்மையும் நம் மக்களுக்கு ஏற்படாது என்று கூறுகிறோம்.

"அன்னியர் (ஆங்கிலேயரைத்தான் கவிஞர் குறிப்பதாக நினைக்கிறோம்) அமைப்பு ஆட்சி உள்ளவரையும் இந்தப் பார்ப்பனீயச் சூழ்ச்சி இருந்துகொண்டேதான் இருக்கும்" என்கிறார் கவிஞர்.

கவிஞர் கட்டுரையில் இருந்து நாம் ஓர் உண்மையை உணர்கிறோம். 'ஆங்கில ஆட்சியுள்ளவரையும் பார்ப்பனீய சூழ்ச்சியும் இருக்கும்" என்பதே அது. இதனால், பார்ப்பனீயம் தன் வாழ்வுக்கு உறுதுணையாகவே ஆங்கில ஆட்சியை இங்கே நிலையாக—

உள்ளூர் மகிழ்ச்சியோடு வைத்திருக்கிறது என்பதும், பார்ப்பனீயப் பாசறையான காங்கிரஸ் மன்றமும் (இன்றுள்ள காங்கிரசார் ஆட்சிக் கூடங்கள் இதை மெய்ப்பிக்கும்) ஆங்கில ஆட்சியை ஒழிக்க விரும்பவில்லை என்பதையும்,—"வெள்ளையனே வெளியே போ" என்ற வீருப்புப் பேச்சு இன்னும் அமுலில் இருக்கவே செய்கிறது, என்று ஒருபுறம் கூறிக்கொண்டே, "கிடைத்ததைச் சுருட்டடா கிருஷ்ணப்பா" என்று, மற்றொருபுறம் கிரிப்சுத் திட்டத்துக்கும் மட்டமான பலனையே கொடுக்கும் வேவல் திட்டத்துக்கும் பரிந்து, சிம்லா ஓடி, கிழத் தாசியைப்போல, கைத்தலத்தில் இருந்த கருந்தனத்தை, விரைந்து வேண்டாமெனக் குட்டையில் வீசி எறிந்துவிட்டு, பசி எடுத்த பின் குட்டை நீரையும் வற்ற அடித்து ஆர்ப்பரித்துச் சிறு பொன் தேடும் அறிவிலாரைப் போல், புல்லெலாம் தெரியக் காட்டிப் பருவிரல் முகத்திற் கூட்டிச் சொல்லெலாம் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி (மே. த.) வேவல்இல் லெலாம் இரந்து நின்றபரிதாப நிலையும், இன்று வெள்ளையன் பாதாரவிந்தமே ஆதாரமாகப் பற்றிக்கொண்டு கூடப் பிறந்த முஸ்லீம், தாழ்த்தப்பட்ட திராவிட சகோதரர்களையும் அவமதித்துப் பகை செய்துகொண்டு, தண்டவாளம் பேர்த்த தந்திக் கம்பியை அறுத்த தான்தோன்றிப் புரட்சி வீரர்கள், பழக்கப்பட்ட அடிமைகள்போல், இராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டு, மே. த. வேவல் துரைக்கு அடங்கி நடந்துகொள்வதும், வெள்ளையர் ஆட்சியில் எத்தனைக் கொடுமைகளிருப்பதாகக் கூறினார்களோ அத்தனைக் கொடுமைகளையும் மற்ற சிறுபான்மைக் கட்சியாருக்குச் செய்துவருவதும் ஆகிய நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்த்தால் இது விளங்கும்.

"வெள்ளையனை ஒழிக்காதவரையில் விடுதலை உங்களுக்கு எப்படி கிட்டும்?" என்று நம்மை அவர்கள் கேட்கக்கூடும். அவர்களுக்கு யாம் கூறும் பதிலை, காங்கிரஸ் தோழர் கோவை ஐயாமுத்து எழுதிய 'மேயோ கூற்று மெய்யா? பொய்யா?' என்ற நூலில் 46–65 பக்கங்களில் உள்ளவற்றை ஒருமுறை படித்துத் தெரிந்துகொள்ள வேண்டுகிறோம். (இடமின்மையால் ஈண்டு விளக்கவில்லை) ஆயினும் இரண்டொரு உதாரணத்தின்மூலம் விளக்குகின்றோம்.

"ஏ பார்ப்பனீயமே, நீ திராவிடர்களாகிய எங்களை மதமாகிய சிறையில் தள்ளி அறியாமையாகிய பூட்டால் பூட்டி வைத்திருக்கிறாய், நாங்கள் விடுதலை பெற முடியாதபடி! ஆனால் நீயோ, எங்களைச் சூழ்ச்சி என்னும் பொறியில் மாட்டி, எம் இரத்தத்தை உறிஞ்சுகிறாய். எம்மை வஞ்சித்த உன்னையும், உன் கங்காணிகளையும், ஆங்கில ஆட்சி, அடிமைச் சிறையிலிட்டு அடிமைப் பூட்டு பூட்டிக் காத்து, நம்மிருவர் பொருளையும் உறிஞ்சுகிறது. ஆனால், எங்கள் பொருளை உன் வழியாகவே பெறுகிறது. நீ உன்மேல் ஏறி புள்ளவனைத் தள்ளி விடுதலை பெற உன்னோடு சேர்ந்துழைக்க எங்களை அழைக்கிறாய். ஆனால், எம்மை வஞ்சித்த உனக்கும் யாங்கள் உதவி செய்யவேண்டுமானால், எம்மைச் சிறை நின்றும் நீக்கிவிடு; எம்மேல் உட்கார்ந்து அனுபவிக்கும் இன்பத்தைச் சற்றுத் துறந்து, உன் மேல் உள்ள ஆங்கிலேயனோடு கட்டிக்கொண்டு கீழே விழு. அப்போது எங்களுக்கு முழு விடுதலையும், சுமையில்லாமையால் உனக்காகப் பரிந்து அன்னியனோடு போராடும் வலிமையும் ஏற்படும். அப்போது மூன்றும் மனிதன், இருவரோடு எதிர்க்க முடியாமல் உன்னைச் சிறை விடுத்து, உன்மேல் நின்றும் இறங்கி ஓடி விடுவான்" என்று யாங்கள் கூறுகிறோம். "ஆனால் நாங்கள் நல்ல வழி கூறியதற்காக, நீ எங்களைத் திட்டி மேலும் துன்புறுத்துகிறாய்! எனவேதான், உன்னை ஒழிப்பதே எங்கள் முதல் வேலை; பிறகே மூன்றுவது ஆளை ஒழிப்பது" என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம், என்று கூறுகிறோம்.

"இது நிற்க, எந்த நாட்டிலும் குடிகளுடைய க்ஷேமம் அரசாங்க உத்தியோகஸ்தருடைய ஜாதி, மதம், நல்லவர் கெட்டவர் என்ற வேறுபாடுகளைப் பொறுத்தது அல்ல; ஆனால், அந்த அரசாங்கத்தின் சட்டங்களின் குணகுணங்களையே பொறுத்து நிற்கும்" என்கிறார் கவிஞர்.

உண்மைதான்! ஒத்துக்கொள்கிறோம். ஆனால், இப்போதுள்ள அரசாங்கம் ஆரியத்தின் ஆசியால் வாழும் ஆங்கில ஆட்சியாகும்.

இன்னும் தெளிவாகக் கூறவேண்டுமானால், ஆரிய ஆட்சி (வெள்ளை-மஞ்சள் ஆரியக் கூட்டாட்சியே இருக்கிறது.) எனவே, இன்றுள்ள சட்ட திட்டங்களின் குறைகுணங்கள், பார்ப்பனரல்லாதாரான திராவிட சமுதாயத்துக்குப் பெரும் பாதகமும் பழியும், பட்டிமையும் புரிவதாகவே இருக்கின்றன! எனவே, திராவிடர்க்கு நன்மை ஏற்படவேண்டுமானால், இச்சட்டங்களைத் தகர்த்துத் திராவிடர் நலந் தருகிய சட்டங்களையே நாம் அமைக்கவேண்டுகிறோம்; அதற்காகத் திராவிட இளஞ் சிங்கங்களே, இந்துமதக் கொடும் பிடியாகிய கூண்டினின்றும் வெளி வந்து. முன்னோர் மொழிந்த இனப் பண்புகளையும், இன்று காணும் இன எழுச்சிப் பாக்களையும் தம் உண்மைக் குரலெடுத்து உலகம் கேட்டு, உளமஞ்சுமாறு முழக்க, கூவி யழைக்கிறோம். இன எழுச்சி ஓங்கிய பின் திராவிட நாட்டுப் பிரிவினையை வற்புறுத்திப் பெறுவோம். நிச்சயமாகப் பெறுவோம் எங்கள் முஸ்லீம் தோழர்கள் பாகிஸ்தானை எப்படி உயிரைக் கொடுத்தாகிலும் பெற்றே மகிழ்வார்களோ, அப்படி; அப்புறம், முஸ்லீம் தோழர்கள் எப்படித் தமக்கெனத் தனிச் சட்டம் இன்றே வகுத்துக்கொண்டார்களோ அப்படியே திராவிடச் சட்டங்களை—இன்று எம் இயக்கத்தின் அடிப்படை நோக்கங்களாக இருக்கும் சட்டங்களை *பேச—நடை முறையில் கொணர்வோம். எனவேதான், திராவிட நாடு திராவிடருக்கே என்ற இனிய உரிமை இசையினை எட்டுத் திக்கிலும் முரசு கொட்டி முழக்குகிறோம் என்பதை நம் கவிஞருக்குக் கூறுகிறோம்!

"பிராமணரல்லாத காந்தியடிகள் காங்கிரஸின் தலைவராயிருந்து நடத்திய சத்தியாக்கிரகங்களில், பார்ப்பனரில் பெரும்பாலோர் 100-க்கு 30 பங்குத்தியாகம் புரிந்தனர்" என்கிறார் கவிஞர்.

---

*இவற்றைத் தன்மான இயக்கம் சாதித்தது என்ன? சாற்றியது என்ன?" என்ற இந்நூலாசிரியர் நூல்களில் தெளிவாகக் காண்க.

காந்தியடிகள் ஆரிய முதலாளிகளின் கைப்பிடியில், எடுப்பார் கைப்பிள்ளையாய் இருப்பவர்; பார்ப்பனத் தோழர்களையே தமக்குப் பக்கத் துணையாகப் படைத்தவர்; இந்து மதத்தையே இனிய மதமாக எண்ணிப் பார்ப்பனீய வருணாசிரமமே, தம் வாழ்வின் குறிக்கோளாக உடையவர்; ராம ராஜ்யமே சுயராஜ்யம் என்று பகர்பவர். இப்படியிருக்க ஏன், பார்ப்பனர் அவர் சொல்லை ஏற்றுச் சிறை போகாதிருப்பர்? சும்மா ஆடுமா சோழியன் குடுமி' என்பது பழமொழியல்லவா? அதுமட்டுமல்ல; காந்தியடிகளின் பார்ப்பனீய அடிமைப் புத்தியை, உலகம், காந்தியடிகள் தோழர் சுபாஷ் போஸின் வெற்றியைப் புகழாமல் தோழர் சீதாராமய்யாவின் தோல்வி தம் தோல்வி எனக் கண்ணீர் வடித்தபோதே அறிந்துவிட்டது. எனவே, எவ்வழியிலும் பார்ப்பனீயம் பாரத நாட்டுக்கு—ஏன்?—உலக மக்களுக்கே, பாஸிசம்போல் மிகவும் பாழ்படுத்தி, நாஸிசம்போல் நலிவுதரும் வியாதி என்பதே தெளிவாக அறிஞர் உலகு அறிந்திருக்கிறது

பார்ப்பனரல்லாதாரான திராவிடர் ஆட்சியில், கார்டு கவர் முதலிய விலை குறைக்கப்படுவதுடன், கைத்தொழிலும் வியாபாரமும் நாட்டின் இரு கண்கள் போலவும், கல்வியும், குடிமக்கள் கடன்படாமல் வாழும் உரிமையும் கண்ணிற் கருமணிபோலவும், பாதுகாக்கப்படும் என்றுறுதி கூறுகிறோம். திராவிடராட்சியில், நில வரியைக் குறைக்கக் கீழ்க்கண்ட நேரிய முறையையும், கள்ளை ஒழிக்க அறிவுக்கு இயைந்த கீழ்க்கண்ட முறையையும் நடைமுறையில் கொணர்வோம்.

நிலவரியை நிரந்தமாகக்குறைப்பதெப்படி? எந்த நாட்டிலும் முதலாளிகள்தாம் நூற்றுக்கு மிகவும் குறைந்த பகுதியினர். பெரும் பணக்காரர்கள் அம்முதலாளிகளினும் சற்றே அதிக தொகையினராக இருப்பர். சாதாரண வாழ்க்கைக்கு வேண்டிய செல்வமுடையவர் அப்பெரும் பணக்காரர்களினும் அதிக தொகையினர். ஆனால் வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளே இல்லாமல் உழைத்தால்தான்

சாப்பிடக்கூடிய நிலையில் உள்ள ஏழைகள் சமுதாயத்தில் பாதிக்கு மேல் ஆக இருப்பர். எடுத்துக்காட்டாக 100 பேர் உள்ள கிராமத்தில் 1 அல்லது 2 கோடீஸ்வரரான முதலாளிகள் இருப்பர். 4, 5 பெரும் பணக்காரர்களும் 20, 25 சுக வாழ்வினரும் இருப்பர். மிகுந்த 68 பேர் உழைத்துச் சாப்பிடவேண்டிய குடியானவர்கள்; இவர்களில் நிலமுடைய குடியானவர் 30 பேர் இருக்கலாம். மீதி 38 பேர் நெசவு, எழுத்து முதலிய கைத்தொழிலிலும் குமாஸ்தா தொழிலிலும் இருப்பார்கள். ஊரைச் சுற்றிய நில முழுவதும் பெரிதும் முதலிருவகை முதலாளிகளான பெரும் செல்வரிடமே சிக்கியிருக்கும். துண்டு துண்டாகச் சிறிய நிலமுடைய 30 பேரும், தொழிலாற்றும் 38 பேரும், முதலாளிகளின் ஊழியராய் இருந்து உயிர் வளர்ப்பர் பெரிதும் எனவே, ஒடப்பராயிருக்கும் ஏழையப்பர் உயர்ப்பராக வேண்டின், உயர் வாழ்வு உடைய முதலாளிகள் சாதாரண சுக வாழ்வுடைய இடைப்பட்ட மக்கள் நிலக்கு வர வேண்டும்; அதேசமயம் ஏழையப்பரும் அந்த நிலக்கே தம் தாழ்ந்த நிலை நின்றும் உயர வேண்டும். இப்படிப்பட்ட ஒரு நிலை எய்தினல் சமுதாயத்தில் எல்லோரும் சரிநிகர் சமானமான வாழ்வையடையக் கூடும். [இந்த முறையையே ரஷிய நாட்டில் ஐந்தாண்டுத் திட்டங்களில் கையாண்டு வெற்றிபெற்றனர்.]

எனவே, இன்று எல்லோருக்கும் சமமாக விதிக்கப்பட்டிருக்கும் நிலவரி விதி முறையை மாற்றி யமைப்போம். அம்முறையில், தொழிலாளிகளான 68 பேருக்கும் வரி விதிப்பு இராது; அதற்கு மாருகச் சுக ஜீவிகளான சாதாரண செல்வர்களுக்குக் குறைந்த வரி விதிப்பும், முதலாளிகளுக்கு அவர்களின் சாதாரண வாழ்வின் தேவைக்கு அதிகமான வரும்படியை எல்லாம், நாட்டின் நலத்திற்காக வரி விதிப்பின்மூலம் வசூலிக்கும் வரி விதிப்பும் நடைமுறையில் வந்து அதனல் கூடும்பெரும் பொருளேப் பகுத்து, ஒருபகுதியை ஏழைகளேச் சுகஜீவியான செல்வநிலக்கு உயர்த்தப் பயன்படுத்தப் படும். படவே, நாட்டில் உள்ள ஏழைகளுக்கு நிரந்தரமாக நிலவரி

குறைக்கப்படுவது காண்க. இம்முறையையே பார்ப்பனரல்லாதார் இயக்கம் (திராவிடர் கழகம்) விதியாகக் கொண்டிருக்கிறது.

**கள் குடியை முற்றும் ஒழிக்க வழி:**—காங்கிரஸ் ஆட்சியில் நிகழ்ந்ததுபோல இன்றும் நிகழ்வதுபோல ஒரு ஜில்லாவில் கள்ளொழித்து விட்டு அதற்கு அடுத்த ஜில்லாவில் மெல்ல ஒழிக்கும் முறையல்ல, நீதிக்கட்சி (திராவிடர் கழகம்) கைக்கொள்ளும் முறை! நாட்டில் மூலை முடுக்கெங்கணுமே, ஏககாலத்தில் மது விலக்கு விதி அமுலுக்கு வரும். ஆனால், கட்டாயப்படுத்தியல்ல.

100 பேர் உள்ள ஒரு நாட்டில், குடிக்கும் பேர்வழிகளைக் கணக்கெடுத்தால், அதிகப்படியாகப் பேரானாலும் 100க்கு 25 பேருக்கு மேலிராது. இதை மெய்ப்பிக்க ஆயிரம் ஆயிரம் மக்கள் வாழும் ஒவ்வொரு நாட்டிலும் கள்ளுக்கடை நாலைந்தே இருப்பதும், அதேசமயம் காப்பிக்கடை 30, 40 ஆக இருப்பதுமே போதிய சான்றாகும். அப்படிக் கள்ளைக் குடிப்பவரும், உழைத்த உடலில் வலியையும், வறுமையால் வாடும் தன் மனப்புண்ணின் நோவையும், சிறிது நேரமேனும் மறந்து இன்புற்று இருக்கவே குடிக்கின்றனர்.

'தொழிலாளிகள் வேடிக்கைக்காகவா கள் குடிக்கிறார்கள் அந்த வேலையைப் பணக்காரர்களே செய்யட்டும். நாள் முழுதும் ஆலையில் உழைத்துவிட்டு வெளியே வந்ததும், மனிதன் எவ்வளவு தேய்ந்து போகிறான் என்பது அந்த அனுபவம் இல்லாதவர்களுக்குத் தெரியாது. பிரசவத்தினால் ஏற்படும் துன்பம் எப்படி ஆண்களுக்குத் தெரியாதோ, அப்படியே வயிற்றுத் தீயைத் தணிப்பதற்காக ரத்தத்தை, தண்ணீராக்கும் தொழிலாளியின் தவிதவிப்பைத் நாற்காலியில் உட்கார்ந்து பேனாவை 'கிர்கிர்' என்று ஓட்டுகிறவன் ஒருபோதும் அறிய முடியாது. தொழிலாளிகள் கள் குடிப்பதை நிறுத்தவேண்டுமானால்: அதற்கு ஒரே உபாயந்தான் உண்டு. அவர்களுடைய வேலையைக் குறையுங்கள்; அவர்களின் கல்வி யறிவையும் சம்பாத்தியத்தையும் அதிகப்படுத்துங்கள்!" என்று அறிஞர் வீ. ச. காண்டேகர் கூறுகிறார்.

கள்குடியால் மகிழ்ச்சி பிறக்கும் என்பதை வள்ளுவரும் "களித்தோறும் கள்ளுண்டல் வேட்டற்றல், காமம் வெளிப்படும் தோறும் இனிது" என்ற குறளால், "கள்ளுண்பார்க்குக் களிக்கும் தோறும் கள்ளுண்டல் இனிதாமாறுபோல்" எனக்கூறி யுள்ளமையும், மற்றொருகுறளுக்கு [கள்ளினும் காமம் இனிது] பரிமேலழகரும் உண்ட இடத்து அல்லாமல் மகிழ்ச்சி செய்யாதகள்ளினும்' என்றுரை கூறியதால், "கள்ளை உண்டால் மகிழ்ச்சி செய்யும்" என்று பெற வைத்துள்ளமையாலும் மீண்டும் வேறோரிடத்தில் "உண்டார் 'கண் அல்லது அடுநறு' காமம்போல் கண்டார்கண் மகிழ் செய்தல் இன்று" என்றும் கூறி யுள்ளமையாலும் "......மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல உள்ளத்து உள்ளே மகிழ்ப..." என்று குறுந்தொகை போன்ற சங்க இலக்கியங்களும் சாற்றுகின்றமையாலும், தெளிவாக உணர்ந்து கொள்ளலாம். ஆனால், வள்ளுவர் கள்ளுண்ணாமையை ஏன் வற்புறுத்தினார்? எனின், கள் குடியை மக்கள் அளவுக்கு மீறிக் குடித்து விடுங்கால் கேடும் அல்லலை எண்ணித்தான், என்க.

இதனையும், வள்ளுவர் கூறிய

"கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானை [அதிகமாகக் கள்ளுண்டு அவமதிப்புறும் ஒருவனைக்] காணுங்கால் உள்ளான்கொல் உண்டதன் சோர்வு?" என்று கூறுவதால் அறியலாம்.

காலமெலாம் உழைத்தாலும், கால் வயிற்றுக் கஞ்சிக்கும் கதியின்றிக் கவலையுறும் கல்லாத பாமர மக்கள், கள்ளையுண்டு கவலையை மறக்கவே செய்வர். பெரியோர்கள் கட்குடியினைப் பெரிதும் இழித்துப் பேசுவரே என எண்ணி அவர்களால் சும்மா இருக்க முடியாது, இருந்தால் மீண்டும் மறுநாளில் வேண்டிய வேலையில் புக முடியாது சோர்ந்து போவான். [நாகரீகமுடைய-படித்த-நம்மவரில் கூடத் தேயிலை, நீர் காபி (*Coffee*) குடிக்கும் பேர்வழிகள், ஒரு வேளை தேநீர் காப்பி குடிக்காதிருந்தால், அவர்கள் தலைவலியாலும் சோம்பலாலும் படும் அல்லலை அறியாதவர் யார்?] எனவே தான் தன் கவலையைப் போக்க ஒரு வழியைக் காட்டாத பெரியோர்களின் பேச்சில் நம்பிக்கை யிழந்து தன் அனுபவ மெய்மையைக் கைக்கொள்

கிறன் ஒவ்வொரு குடியனும் இதை, 'உண்ணற்க கள்ளை' என்று கூறிய வள்ளுவர் அதே குறளில், 'சான்றோரால் எண்ணப்படவேண்டாதார் உணின் உண்க'' என்று விதித்த விதியாலும் உணரலாம்.

எனவே, நாம் செய்ய வேண்டியது என்ன? குடியரான வர்களும், கல்லாத தொழிலாளிகளும், கள் குடிப்பதற்குக் காரணமாகிய அவர்களின் வறுமையையும், கல்வியின்மையை யும், கவலையையும் போக்கி, அவர்களுக்கு எதிர்கால வாழ்வில் என்றும் நன்மையுண்டாகும் என்ற எண்ணத்தையும் செல்வ நிலையையும் கல்வியையும் அவர்களுக்கு உண்டாக்கித் தர வேண்டும். இன்றைய சமுதாயத்திலும், கள்ளுண்பவர்களில் 100க்கு 90 பேர் வறியராகவும், கல்வியில்லாதாராகவும் இருத்தலோடு, அதிகமாகப் போதைமிகும் அளவு கள்ளுண்ட குடியராலேயே சமுதாய அமைதி கெட்டு அல்லல் ஏற்படுவதையும் நடுநிலைமைக் கண் உள்ளவர் காணலாம்.

கள்ளுண்ணும் மக்களின் பொருள் கொள்ளையாகக், கரியாக்கப் படுகிறதாக நாம் கூறுகிறோம்; அவ்வாறு அவர்கள் பொருள் வீணாகக் காரணமாயிருப்பதும் இன்றைய அரசாங்கம்; கள் கடைகளை அதிக மான குத்தகையில் ஏலம் விடுவதும், கடைக்காரர்கள் மொந்தைக் கள்ளுக்கும், ஒரு டிராம் சாராயத்துக்கும் அதை உண்டாக்கிய செல வைவிட நாலைந்து மடங்கு விலை யேற்றி மொந்தைக்கள் எட்டணா பத்தணாவாக விற்பதுமே யாகும். இதைத் தடுக்க வேண்டுமானால், கட்குடியர் வீண் விரயம் செய்யாதிருக்கும்படி அரசாங்கமே நேரடி யாகக் கள் கடையை நடத்தி, ஒரு மொந்தைக் கள் உண்டாக்க ஏற் படும் செலவின்மேல், 100க்கு 10 பங்கு லாபம் வைத்து விற்பதா லும், குடிக்கும் ஒவ்வொருவனும் போதை மிகுதியாகிப் பொல்லாங்கு இயற்றாமற்படி, ஒவ்வொரு குடியனின் போதை புகாவை (ராணுவத் தில் குற்றவாளிக்குத் தண்டனையாகக் கசையடியைத் தாங்குமளவும் 'டாக்டர் கூற அவ்வாறே குற்றவாளியை அடிப்பது போல) டாக்டர்

அறிந்து கூற, அவ்வாறே போதை வராத அளவு விற்பதாலும் தடுக்க முடியும்.

மேலும், கள் விற்று வந்த காசினுல் கேட்குடியர்களின் கல்விச் சாலை ஏற்படுத்திக் குடியர்களுக்குக் கல்வியையும் பகுத்தறிவையும் வளர்ப்பதனுல், அவர்கள் குடிப்பதால் வரும் தீமையைத் தாமே அறிந்து அதைத் தாமே நிறுத்தி விடுவார்கள். காரணம் குடியன் சான்றோர் சபையில் படும் அவமானத்தை அறிந்து, அதற்கு மனித இயல்பால் வெட்கப் படுவாஞதலால்! வெளிப்படையாகக் கள்குடிப் பதையும், ஊர் நடுவில் குடிப்பதையும் குடியர்களே விரும்புவதில்லை.

அன்றியும் குடியர்களின் கவலையைக் குறைக்க நாம் நிலவரி முறையால் அவர்கள் செல்வநிலையை உயர்த்தவும் வேண்டும். இவ் விதம் எல்லோரும் ஒரு முகமாகக் கள்ளொழிப்பு ஐந்தாண்டுத் திட்டத்தை ஒரே காலத்தில் தொடங்கினுல் திண்ணமாக வெற்றி யடையலாம். மன்பதையும் முன்னேறும்; இன்பவாழ்வுறும். ஆனுல் அரசினர்பெரும் கடன்படநேரும் என்னலாம், அதைச்சரிக்கட்டவே தான். முதலாளிகளின் பணப்பெருக்கத்தையும் பறிமுதல் அல்லது வரி விதிப்பால் வசூல் செய்வது என்ற விதியைக் கையாள்வது. இம் முறை அறிவுக்குப்பொருத்தமானது என்பதை எண்ணிப் பார்த்தால் எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள்.

இனி இறுதியாகக் கவிஞர், 'பார்ப்பனரல்லாதார்என்றல்யார்'? என்றே கேட்கத் துணிந்து விடுகிறுர். 'இந்தக் கேள்வியைப் பார பட்ச மின்றி நிதானமாகக் கவனிக்கும்படி மிகவும் வேண்டிக்' கொள்ளுகிறுர் கவிஞர்! யாரை வேண்டிக் கொள்கிறுர்? என்று பாருங்கள். 'பிராமணரல்லாதாரையே!'. இது முன்னுக்குப் பின் முரண்பட்ட வாதம் அல்லவா?

இது எப்படி யிருக்கிறது என்ருல், மனிதன் என்ருல் யார்! கடவுள் என்று யாரைக் கூறுவது? என்ற ஆராயப் புகுந்த ஒருவன்

இப்படி யிப்படி யிருப்பவன்தான் மனிதன் என்றும், —'மேலான குணங்களான இன்ன இன்னவற்றை உடைய இதைத்தான் கடவுள் என்றும்கூறவேண்டும்' என்றும்,முறையேஒழுங்காக மெய்ப் பிக்காத முன்பே அப்படி மெய்ப்பிக்கப் படவேண்டிய பொருளையே கண்டு கேட்கிறது போலல்லவா இருக்கிறது! இதை இன்னும் விளக்கமாகச் சொன்னால் குருடும் குருடும் குருட்டாட்டமாடிக் குழி விழுந்த கதைபோலவே இருக்கிறது, 'இவர்கள் தாம் பார்ப்பனர் அல்லாதார்' என்று திட்டமாகப் பிரித்தறிய முடியாத கவிஞர், 'பார்ப்பனரல்லாதார் என்றால் யார்?' என்ற கேள்வியைப் பார்ப்பன ரல்லாத மக்களையே கேட்டு நிதானமாகக் கவனிக்கும்படிக் கூறும் வாதமும் இருக்கிறது. இவர் வாதமே பார்ப்பனரல்லாதாரைப் பகுத்துக் காட்டுகிறதால் பார்ப்பனரல்லாதவர் என்றால் யார்? என்ற கேள்வியும் வெற்றெனத் தொடுத்துப் பயன் இன்றி முடிந்ததாகி விடு வதால் அதற்கு நாம் பதில் கூற வேண்டிய அவசியமே இல்லாமல் போகிறது. இன்னும் மேலே கவிஞர் தொடர்ந்து கேட்கும் கேள்வி களுக்குத் தவறாமல் பதில் கூற வேண்டியிருப்பதால் அவற்றை எழுதி, நம் பதிலையும் அதற்கு நேராக எழுதுவோம்.

| எண் | கவியின் கேள்வி | நம் விடை |
|---|---|---|
| 1 | பிராமணரல்லாதார் என்றால் பிராமணரல்லாதார் எல்லோ ரும் ஒரே ஜாதியைச் சேர்ந்த வர் என்று அர்த்தமா? | பிராமணரல்லாதார் எல்லோ ரும் ஒரே ஜாதியல்ல, செட்டி, முதலி, நாய்க்கர், பிள்ளை முதலிய பல ஜாதியினர். |
| 2 | ஒரே மதத்தையாவது சேர்ந் தவர்களா? | ஒரே மதத்தைச் சேர்ந்தவரல்ல சைவம், வைணவம், பௌத்தம் சமணம், கிறிஸ்துவம், இஸ்லாம் முதய பல மதத்தைச் சேர்ந்த வரே. |
| 3 | பிராம்மணரல்லாதார் ஒரே நிறமா? | இல்லை. சிகப்பு, செங்கருப்பு, கருஞ்சிவப்பு முதலிய பல நிறத்தினரே. |

| | | |
|---|---|---|
| 4 | அவர்கள் பேசுவது ஒரே பாஷையா? | இல்லை; தமிழ், தெலுங்கு கன்னடம், மலையாளம்முதலிய பல மொழிகள் |
| 5 | அவர்கள் ஒரே விதமான சடங்கு ஏதேனும் உள்ளவரா? | பலர் பலவகைச் சடங்கு உடையவரே. |
| 6 | அவர்கள் கோயில் குளம். குல தெய்வம் என்ற எதிலாவது ஒரே கொள்கை உடையவரா? | இல்லை; தனித் தனிக் கோயில் குல தெய்வம் உடையவர். |
| 7 | அவர் கொள்வது கொடுப்பது உண்பது, தின்பது இவற்றில் ஏதேனும் ஒன்றானவர்கள் என்பது பொருளா? | இல்லை. உண்பது தின்பது தனித் தனியாகவே நடத்து கின்றனர்! |
| 8 | பின், பிராமணரல்லாதார் என்ற சமூகம் எங்கே இருக்கிறது? | திராவிட நாட்டில் தான் வெறும் ஏட்டிலுமல்ல, வான வீட்டிலுமல்ல |

கவிஞர் அவர்கட்குச் சமூகம் என்பதனுடைய பொருளே (உள்ளபடியே) தெரியவில்லை என்பதே இக்கேள்விகளால் நாம் உணர வேண்டியவைகளாய் இருப்பதால் இதைப் பற்றிச் சிறிது விளக்கி எழுதுகிறோம்.

சமூகம்—சமுதாயம்—கூட்டம்—சபை என்றே பொருள் கூறுகிறது **சதுர் அகராதி**. இப்பொருளையே சுன்னாகம் **அ.** குமாரசாமிப் புலவர் தொகுத்த **இலக்கியச் சொல்லகராதியும், காரனேஷன் தமிழ் அகராதியும், ஆனந்தவிகடன் தமிழ் அகராதியும்** சைவசித்தாந்த கழகத்தினரின் **கையடக்கமான தமிழ் அகராதியும்** பிறவும் கூறுகின்றன. இதில் சிறப்பாக **ஆனந்தவிகடன் அகராதி, சமுதாயம்** என்பதற்கு **மக்களின்திரள்** என்று பிரித்துக் குறித்திருப்பது கருதற்பாலதாம். மேலும் காலஞ்சென்ற கவியரசர் **பாரதியார்** தம் **சமுகம்** என்ற கட்டுரையின் முகவுரையிலும்,

சமூகம் என்பதற்கு,'வகுப்புக்கள் இருக்கலாம்; பிரிவுகள் இருக்கலாகாது; வெவ்வேறு தொழில் புரியலாம்; பிறவி மாத்திரத்திலே உயர்வு தாழ்வு என்ற எண்ணம் கூடாது; மதபேதங்கள் இருக்கலாம்; மதவிரோதங்கள் இருக்கலாகாது.' என்று பொருள் கூறியுள்ளார்.

அன்றியும், உலகம் போற்றும் ஒரு நூலாய் எழுதிய தன் சமுதாய ஒப்பந்தம் என்ற நூலிலும், 'மானிடசமூகத்தின்' உரிமைச் சாதனத்தைத் தேடிக்கொடுத்த அறிஞரான விடுதலை வீரன் ரூஸோ வும், சமுதாயம் (சமூகம்) என்பதற்குக் கீழ்க்கண்டவாறு பொருள் எழுதுகிறன்.

'குடும்பமும் சமுதாயமும் ஒரேமாதிரி அடிப்படை உடையவை குடும்பமே முதலில் எற்பட்ட சமுதாயம். ......சமுதாயம் என்று சொல்லப்படவேண்டுமானல் முதலாவது சமுதாயப் பொது என்று சொல்லக்கூடிய சொத்துக்கள் இருக்கவேண்டும்.................. பல (வகையான) மனிதர்கள் சேர்ந்ததுதான் ஒரு சமுதாயம்; இப்படிச் சேர்ந்துள்ள ஒவ்வொரு மனிதனுடைய சொத்து, சுதந் திரங்களைப் பிறர் வந்து தாக்காத வண்ணம் பாதுகாப்பதே அந்தச் சமுதாயத்தின் கடமை......இப்படி ஒன்று சேர்கின்ற போதுதான் சமுதாயம் உருவாகிறது:' என விளக்கித் தெளிவாக எழுதியிருக் கிறர்.

மேலும், 'வழியாக வந்து கொண்டிருக்கும் சரித்திரப் போக்கில் குடும்பம் என்பது ஒரு சிறிய அமிசம்; ஜாதி அல்லது சமுதாயம் என்பது பெரிய அமிசம்' என்று ஆஸ்வால்ட் ஸ்பெங்களர், என்ற ஜெர்மானியப் புலவரும் கூறியுள்ளார்.

இவற்றை எல்லாம் சற்று எண்ணிப்பார்த்தால், கவிஞர் கருது வது போல, சமுதாயம், சமூகம் என்று ஒருமக்கட் பிரிவைக்கூற 'ஒரே ஜாதி, ஒரே மதம், ஒரே நிறம், ஒரே மொழி, ஒரே சடங்கு,

ஒரே தெய்வ வழிபாடு, ஒரே வழக்கம்' என்பவற்றை அம்மக்கள் உடையவராக இருக்க வேண்டியதில்லை என்பது தெளிவாகும் என்? ஒரு குடும்பத்தில் (குடும்பமே முதல் சமூகம்) உள்ள அனை வரும் ஒரே மதத்தினராகவும், கடவுள் வழிபாட்டினராகவும், ஒரே நிறத்தினராகவும், தொழிலினராகவும்தாம் இருக்க வேண்டும் என்ற நியதி இல்லையல்லவா? தந்தை ஆஸ்திகனுய் சேவாளியா யிருக்கலாம். மகன் நாஸ்திகனுய் எழுத்தாளியாகவும் இருக்கலாம். தாய் செந்நிறத்தினளாகவும், மனைவி கரியளாயும் இருக்கலாம். ஆயினும் அனைவரும் குடும்ப சமுதாயத்தைச் சேர்ந்தவரே.

செங்குட்டுவன் சைவனுயும், இளங்கோ அடிகள் சமணராயும் குட்டுவன் குடும்பியாயும் அடிகள் துறவியாயும் இருப்பினும் அவர்கள் ஒரே குடும்பத்தில் பிறந்தவர்களே. காந்தியடிகள் வரு ணுசிரமியாயும், அவர்மகன் ஹிராலால் காந்தி முஸ்லீமாயும் இருப்பி னும் அவர்கள் ஒரே குடும்ப சமூக உறுப்பினரே யல்லவா?

சமுதாயத்தின உண்மைக்கு வேண்டிய இரண்டு பொருளான பொதுச் சொத்துரிமையும், அரசியல் அந்தஸ்தும், திராவிட சமு தாயத்தினரான பார்ப்பனரல்லாத சமூகத்துக்கும் உள்ளன. திராவிடரின் பொதுச் சொத்துத்தான் திராவிடநாடு; திராவிடரின் அரசியல் அந்தஸ்து அந்நாட்டைத் தாங்களே ஆள்வது. இன்று திராவிடமக்கள் ஆளப்படுபவராய் ஆக்கப்பட்டுள்ளனர். ஆயினும் திராவிடமக்களின் இன்றைய பொதுச் சொத்து திராவிட நாட்டைத் தாமே பெறும் நோக்கமே! அரசியல் அந்தஸ்து பார்ப்ப னீயத்தின் கட்டிலிருந்து விடுபவதே. அன்றியும் கவிஞர் கூறுவது போல மதத்தையும் கடவுளையும் பார்ப்பனீயச் சுழலில் சிக்குண் டுள்ள எல்லாத் திராவிடரும் நம்பியும் உள்ளனர்.

'மக்கள் சமுதாயம்' எனில் அதில் பலபல கொள்கையினர் இருப்பதுபோலவும், அவர்கள் சொந்தச் சுதந்திரக் கொள்கைகளுக் காக அரசு ஏற்பட்டது போலவும், பார்ப்பனரல்லாத சமூகத்தின்

நலனைப் பாதுகாக்கத் திராவிடர் கழகமும், (பார்ப்பனல்லாதார் சங்கம்) திராவிடருக்குள் பல விதமான கொள்கையினரும் உள்ள தன்மையுமே, திராவிட சமுதாயம் உண்டு' என்பதை மெய்ப்பிக்கும்.

அவ்வளவேன்? கவிஞர் இதுவரை பேசி வந்ததிலிருந்தே பார்ப்பனரல்லாத சமூகம் இருக்கிறது என்பது தெளிவாகிறதே! இது நிற்க.

'பிராமணர் எல்லாருக்கும் பொதுவானவை என்றுசொல்ல இரண்டொரு விஷயங்களாவது இருக்கின்றன. ஆனால் பிராமணரல்லாதாருக்கென்று அப்படி ஒன்றுமில்லை. உதாரணமாகப் பிராமணர் 4 வேதங்களை நம்புகிறார்கள். பிராம்மணர்கள் எல்லாரும் பூணூல் போட்டுக் கொள்கின்றனர். தமிழ் நாட்டைப் பொறுத்தவரை எல்லாப் பிராமணரும் மது மாமிசம் விலக்கியுள்ளனர். மேலும் கலியாணம் முதலிய காலங்களில் பிராமணர்களுக்குள் பொதுவான பல சடங்கும் மந்திரங்களும் உள. இப்படி எல்லாருக்கும் பொதுவானது என்று சொல்லிக்கொள்ளப் பிராமணரல்லாதாருக்கு என்ன இருக்கிறது? நீங்களே நினைத்துப் பாருங்கள்' என்கிறார் கவிஞர்.

நாமும் கூறுகிறோம்; 'நீங்களே நினைத்துப் பாருங்கள்' என்று!

பிராமணர்கள் என்று சொல்லக் கவிஞர் காட்டிய சில அடையாளக் குறிகளைப் பார்ப்பனரல்லாதாரில் சிலரும் கைக் கொண்டுள்ளனர். உதாரணமாக, பார்ப்பனரல்லாத மதவாதிகளில், சைவ, வைஷ்ணவர்கள் 4 வேதங்களையும் நம்புகிறார்கள். இதற்காதாரம், திருவாசக தேவார சைவாகமங்களும், திவ்யப் பிரபந்தங்களும், வேதத்தின் தமிழ்மொழிபெயர்ப்பே என்று சமயவாதிகள் கூறுவதே போதும். வைதிகர் என்ற சொல்லே இதை மெய்ப்பிக்கும். நம்மவரில் வைதிகருக்கென்ன குறைவா?

பார்ப்பனரல்லாத மக்களில், விஸ்வப்பிராமணர்கள், வைசியச் செட்டிமார்கள், கருணீகர்கள், கவுண்டர்களில் ஒரு பிரிவினர், வள்ளுவர்கள் போன்றவர்கள், பிராமணர்களைப் போலவே பூணூல், அணிகின்றனர். இது கண்கூடு.

பார்ப்பனரல்லாத மக்களில் திருநெல்வேலிச் சைவர்கள். கருணீகர்கள், மற்றும் பலப்பலர் மதுவையோ மாமிசத்தையோ கனவிலும் தொடுவதே இல்லை.

பார்ப்பனரல்லாத மக்களில், திருமணம் முதலியகாலங்களிலும் 'ஆரியப் புரோகிதன் தலைவனாக இருந்து நடத்திக் கொடுப்பது,' 'தாலிகட்டிக் கொள்ளுவது,' 'இறந்தவருக்குத் திதி கொடுப்பது' 'இறந்தவரைப் புதைப்பது, அல்லது சுடுவது' என்பன போன்ற பலவகையான சடங்குகளும் மந்திரங்களும் பொதுவாக இருப்பதோடு அன்றிப் பார்ப்பனர்களைப் போலவே, 'வரதக்ஷிணை வாங்கல்' 'பெண் பருவம் அடையுமுன்னமே மணம் செய்து விடுவது' 'விதவைகளுக்கு மறுமணம் செய்யாதிருத்தல்' முதலிய சடங்குகளும் மந்திரங்களும் கொண்டுள்ளவரும் உள்ளனர்.

எனவே, பார்ப்பனருக்குக் கூறிய இலக்கணம் பார்ப்பனரல்லாதாருக்கும் இருப்பதால், திராவிடரும் பார்ப்பனராதல் வேண்டும். ஆனால் நடைமுறையில் 'விசுவப் பிராம்மணன்' எனப் பெயர் வைத்துக் கொண்டாலும், பூணூல் போட்டாலும், வேதத்தை நம்பினாலும், மது மாமிசங்களை ஒழித்து, மந்திரச் சடங்காகியவற்றைப் பார்ப்பனரைப் போலப் பின்பற்றினாலும், பார்ப்பனரல்லாத மக்கள். எந்த நாளிலும், பார்ப்பனராக—அரசியலிலும்சரி, சமூக இயலிலும் சரி—ஆரியரால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. எனவே பார்ப்பனரல்லாதருக்கும் பார்ப்பனரின் அடையாளங்கள்

இருப்பதனுல், கவிஞரின் வாதம், *'ஒன்றிற்குக் கூறிய குணம் மற்றொன்றுக்கும் இருத்தல்' என்ற தருக்கக் குற்றம் உடையதாய் ஒழிவதைக் காண்க. எனவே பார்ப்பனருக்குப் பொதுவானது என்று சொல்லவும் ஒன்றும் இல்லை என்பது பெறப்படுகின்றது.' கவிஞர் உரை தவறுகி விடுவதால்.

ஆனல் பார்ப்பனரல்லாதாருக்குப் பொதுவானவை சில உள. அவை:—1. செல்லைச் சைவன் முதல் பஞ்சமன் வரையுள்ள 2000 ஜாதிப் பிரிவுடைய பார்ப்பனரல்லாதார் எல்லாரும், பார்ப்பனர்களால் தாழ்த்தப்பட்டு இழிவு செய்யப்பட்டிருத்தல். இதனைப் 'பார்ப்பனர் மனுநீதி சாஸ்திரம் படிக்கலாம்; மற்ற வருணத்தாருக்கு ஓதுவிக்கக் கூடாது' (மனு. அத்தியாயம் 1 சு 103ல்) என்பன போன்ற ஸ்மிருதி வாக்கினுல் தெளிக. 2. பார்ப்பனரைப் போல வெளி நாட்டிலிருந்து வராமல் திராவிடர்கள் இந்நாட்டிலேயே படைப்புக் காலந்தொட்டிருந்து வருவது. (இதனைக் குமரிக்கண்டம் 'மோஹஞ்சாதாரோ'' என்ற நூல்களில் காண்க) 3. பார்ப்பனீயத்தைப்போல உண்ட வீட்டை இரண்டகம் செய்யாமல் எந்த நாளிலும் அறப்போர் ஆற்றி விருந்தேற்றுப் புரந்தந்து வாழ்தல். விரிவஞ்சி ஏனையவற்றை விடுகிறேம். எனவே பார்ப்பனரல்லாதார் என்று ஒரு சமூகம் உள்ளமையும், அச்சமூகத்திற்கு எனச் சில பொதுக் குணங்களும் கொள்கைகளும் உள்ளமையும் தெளிவாம்.

---

*குற்றம் தருக்கநூல்படி மூன்ருகும்:-1. ஒன்றிற்குரியது வேறொன்றுக்கும் உளதாதல். 'பசு குளம்புடையது; அல்லது கொம்புடையது எனின். ஆட்டுக்கும் அவை உள்ளமையால் அது குற்றம். 2 ஒன்றிற்குக்குரியது அதன் இனத்திலேயே ஒன்றுக்கு இல்லாது போதல்:— 'பசு கருநிறமுடையது; எனின் பசு செந்நிறமும் வெண்ணிறமும் உடைத்தாயிருத்தலின் இது குற்றம்; 3 அசம்பாவிதம். இது வெளிப்படை. (சம்பவியாதது என்றுபொருள்)

ஆகவே 'சமுதாய வாழ்வில் பிராம்மணரல்லாதார் என்ற சமூகம் இல்லவும் இல்லை, இருக்கவும் முடியாது' என்று அறுதி யிட்டுக் கூறிய கவிஞரின் வாதம், உறுதியற்ற மரம்போல் முறிந்து விழுந்து விடுவதன்றியும், கவிஞர் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முயன்று முடியாமல் விழிப்பதும் அவர்தம் சொல்லா லேயே விளங்குதல் காண்க.

'பிராமணர் அல்லாதார் என்ற சமூகம் இருக்கவும் முடியாது இல்லவும் இல்லை,' என்று கூறும் கவிஞர் வாதத்தைப் படிக்கும் போது நமக்குக் காலஞ்சென்ற பார்ப்பனக் கவிஞரான பாரதி யாரின் பார்ப்பனீய அகம்பாவச் சொற்கள்தாம் நினைவுக்கு வரு கின்றன. அவை:—

'பிராமணரல்லாதார் என்ற வகுப்பே கிடையாது; அதுவே பொய்...............தவிரவும் இந்தப் பிராமணரல்லாதார் கிளர்ச்சி காலகதியில் தானே மங்கி அழிந்துவிடும் என்று நிச்சயிப்பதற்கும் போதிய காரணங்கள் இருக்கின்றன. முதலாவது இதில் உண்மை யில்லை.' என்பன.

இவ்வாறு கூறிய பாரதியார் தாம் 1921ல் காலகதி அடைந்து விட்டார்! ஆனால் அவருடைய தீர்க்கதரிசனச் சொற்களோ சித்திரப் பாவையின் அத்தக அடங்கிச் சீண்டுவாரற்றுக் கிடக்க, பார்ப் பனரல்லாதார் கிளர்ச்சி, அதற்கு மாறாக நாளுக்கு நாளாக, மாலை நிழல் வளர்வதுபோல் வளர்ந்து செல்வதன்றியும், கதிரவனைப் போல் தன்னொளியை மிகுதியாக்கி உலகம்எங்கும் பரப்பியும் வருகின்றது. அது திண்ணமாகத் தன் வெற்றிப் பாதையில் வீறுடன் செல்வதை யும், தான் கருதிய நோக்கத்தில் வெற்றி பெறும் என்பதையும், அதற்கு அந்தத் தைரியம் இருக்கிறது என்பதையும், தோழர் C. R. ஆச்சாரியாரே நன்கு விளக்கி யுள்ளார். 'பசுவை வெட்டு வதா? அது பாவமல்லவா? நாட்டைத் துண்டாடுவது நல்லதல்லவே!' எனப் புலம்பிய திரு. ஆச்சாரியாரவர்களே, பாகிஸ்தானை ஒப்புக்

கொண்டதும் அன்றி அதற்குப் பரிந்து சிலகாலம் எதிர்ப்புக்கும் அஞ்சாமல் பிரசாரமும் புரிந்து விட்டு. 'பாகிஸ்தானைப் போல் திராவிடஸ்தானையும் ஒப்புக்கொள்ள வேண்டியே வரும், நாட்டில் ராமசாமி நாயக்கருக்கு மிகுந்த செல்வாக்கு இருக்குமானால்' என்றும், தமிழ்நாட்டை ஆளும் தைரியம் நாயக்கருக்கு (பெரியார் ஈ. வே. ரா.) உண்டு.' என்றும் கூறி யுள்ளார்; பாரதியாரின் வாக்கும், (அ)சத்திய மூர்த்தியின் ஜம்பப் பேச்சைப் போல் பொய்யாய் விட்டதை எண்ணினால் எமக்கு வருத்தமாகவே(?) இருக்கிறது! கவிச்சக்ரவர்த்தி வாக்கு பொய்த்து விட்டதனால்!

கடைசியாகக் கவிஞர்க்குப் 'பார்ப்பனரல்லாதார் என்றால் யார்?' என்பதைத் தெரிந்து கொள்ளச் சில வழி கூறுகிறோம்.

வடநாட்டில் திரு. பா.வே. மாணிக்க நாயக்கருடன் சென்று அங்கோரிடத்தில் திரு. பா வே. மா. நாய்க்கர், திதி கொடுத்த போது, அங்கே அவரைப் பிய்த்துத் தின்ற பார்ப்பனப் புரோகிதர் களையும், அவர்கள் செயலையும் கவிஞர்க்கு நினைப்பூட்டுகிறோம்!

உணவுச்சாலைகளிலும் (புகைவண்டி நிலையங்களில் உள்ள உணுக் கடையிலும் கூட), கோயில்களிலும், குளங்களிலும், சுடு காட்டிலும், ஊரில் உள்ள அக்ரஹாரங்களிலும், கவிஞரைச் சென்று பார்க்கும்படி வேண்டுகிறோம.

உணவுச்சாலைகளில், 'பார்ப்பனர்கள் சாப்பிடும் இடம்' என்றும்' 'மகமதியர்களுக்கு மட்டும்,' என்றும் 'பிராமணரல்லாதாருக்கு மட்டும்' என்றும் தொங்கும் இடங்களில் நின்றுபார்த்தால் பார்ப்பனரல்லாதார் யார்? என்று விளங்கும்.

கோயில்களில் அர்த்த மண்டபத்திற்கு மேல் செல்ல முடியாமல் சாமியைத் தீண்ட முடியாமல், புரோகிதர் மூலமே கடவுளை வழிபட வேண்டியும் உள்ள மக்கள் யார்? என்று கவனித்தால் பார்ப்பனரல்லாதார் என்றால் யார்? என்று அறியலாம்.

இறுதியாக, 'இருக்கவே முடியாத ஒன்றை (பார்ப்பனரல்லாதார் சமூகம்) இருப்பதாக மயங்கி அதற்காகவே கட்சி கட்டிக் கொண்டு, கசப்பான பேச்சுக்களுக்கும், கடுமையான மனஸ்தாபங்களுக்கும்' இதுவரையும இடங்கொடுத்துப் பேசி, அதையே புத்தக வடிவிலும் வெளியிட்டு வீண்சிரமம் எடுத்துக்கொண்ட (என்னெனின் இல்லாத ஒன்றைப்பற்றிக் கவிஞர் கவலைப் பட்டுப் பேசவேண்டியது இன்றியமையாத—அறிவுக்குப் பொருத்தமான செயலும் ஆக இல்லாதிருந்தும், இவ்வளவு நேரம் மூச்சுப் பிடித்துப் பேசியதால்) வருத்தமுற்ற நாமக்கல் கவிஞரின் நாவன்மை பாலையிற் பெய்த மழை போலப் பயனின்றிக் கழிந்ததற்கு மிகவும் யாம் இரங்கி எம் ஆழ்ந்த வருத்தத்தைத் தாழ்மையுடன் அவருக்குத் தெரிவித்துக் கொண்டு, இனியேனும் எம் சிற்றுரைகளையும் எங்கள் தலைவர்களின் பேருரைகளையும், காய்தல் உவத்தல் அகற்றி ஆராய்ந்து உண்மை புணர்ந்து, இன எழுச்சிமிக்கவராய்த் தம் இனிய புலமையைத் திராவிட இன எழுச்சிக்கும் மறுமலர்ச்சிக்கும் பயன்படும் வழியில் செலவிட்டு, எம் போன்ற இளைஞர்கட்கும் வழிகாட்டியாய்த் தலைமை வகித்துத் திராவிடப் பிரிவினைப் போரை முன்வந்து நடத்திக்கொடுத்து, திராவிடநாட்டைப் பெற்றுக் குடியரசைச் சமைத்து, எல்லாத் திராவிடமக்களையும் பார்ப்பனியப் பாழ்ச்சிறையினின்றும் பக்குவமாகக் கத்தியின்றி ரத்தமின்றிச் சித்தவைராக்கியத்துடன், நேரிய முறையில் போரிட்டு விடுதலையளித்து, விடுதலைவீரராய் எல்லோரையும் செய்து, தமிழ்உலகத்தை வளம்படுத்தித் தொழிலாளர் தோழனும், நகரதூதனும் விளங்கி, ஒப்பற்ற திராவிடமணியாக யாவரும் இனிது போற்ற பெரும் புகழ்பெற்று, உடன் பிறந்தே கொல்லும் வியாதியைப் போன்றவரைத் தகர்த்து, நலம் செய்ய நம் திராவிடப் பெருங்குடி மக்களின் கட்சியாகிய பார்ப்பனரல்லாதார் கழகம் எனப் பெயருடையதும் நீதிக் கட்சி என்றும் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் என்றும், அழைக்கப் படுவதுமான திராவிடர் கழகத்தில் சேர்ந்துழைக்கத் தோழர் கவிஞர் இராமலிங்கம் அவர்களை மிகவும்

வணக்கமுடன் வேண்டிக் கொள்கிறோம். இக்கட்டுரையை எளியேன் எழுத அவர் காரணமாய் இருந்ததால் அவருக்கும், வெளியிட்டெவிய தமிழ்ப்பண்ணையாளருக்கும் நன்றியும் செலுத்தித் தமிழ்ப் பண்ணைத் திராவிடத் தோழர்களையும் திராவிடர் கழகத்தில் வந்து சேருமாறு வேண்டிக் கொண்டு, இதன்வழி அழைப்பிதழ் அனுப்புகிறோம்.

நல்லது செய்ய மாட்டீராயினும்
அல்லது செய்யன்மின்! அதுவே
எல்லோரும் உவப்பது; "பெரியோர் செயலே!"

வாழ்க திராவிடம் திராவிடம் நமது மூச்சு

திராவிடநாடு திராவிடருக்கே



பிற்சேர்க்கை:

## இந்நூலில் வந்துள்ள மேற்கோள் நூல்

# அட்டவணை

இதழ்கள் (News Papers) முதலிய:—

தமிழ் மணி, தந்தி, ஆனந்த விகடன், பிரசண்ட விகடன் கல்கி, தமிழ்முரசு, தினசரி, இந்தியன் எக்ஸ்பிரஸ், சுதந்தரம் (Swatantra) முதலிய தன்னாட்சி மன்றத் தாள்களும், திராவிடநாடு, குடியரசு, விடுதலை, தமிழ் உலகம், தமிழ்ப் பொழில் முதலிய பார்ப்பனரல்லாதார் நலம் கருதி வரும் இதழ்களும் ஒப்பு நோக்கி உண்மையுணரப் பயன்பட்டன.

நூல்கள் (Books):—

1. கவிஞன் குரல்
2. நாமக்கல் கவிஞர் தனிப்பாடல்கள்
3. என் கதை

} தோழர் நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம்

4. வால்ட் விட்மன் கட்டுரைகள்—தோழர் சுத்தானந்த பாரதி
5. புதுமைக்குறள்—தோழர் மதுரை. க. முத்துச்சாமி
6. சிலப்பதிகாரம்— ,, இளங்கோ அடிகள்
7. திருக்குறள்— ,, திருவள்ளுவர்
8. பாரதிதாசன் கவிதைகள்—,, புரட்சிக்கவிஞர்
9. பாரதியார் பாடல்கள் & வசனம்—,, சி. சுப்ரமணிய பாரதியார்
10. புறநானூறு
11. குறுந்தொகை } —சங்கப் புலவர்கள்.
12. கம்பராமாயணம்—கவிச்சக்ரவர்த்தி கம்பர்
13. மூவர் தேவாரம்—நாயன்மார்கள்
14. திருப்புகழ்—அருணகிரி நாதர்
15. ஹரிஜன் கட்டுரைகள்—தோழர் காந்தியடிகள்

16. மனுஸ்மிருதி—மனு அரசர்
17. திருவாசகம்—மாணிக்கவாசகர்
18. திவ்ய பிரபந்தம்—ஆழ்வார்கள்
19. ஐந்திலக்கணம் (இலக்கண விளக்கம்)—திருவாரூர் வைத்திய [நாத தேசிகர்
20. அகப்பொருள் விளக்கம்—நாற்கவிராச நம்பி
21. இறையனாரகப் பொருள்—நக்கீரர் உரை
22. பன்னிருபாட்டியல்—..........................
23. புறப்பொருள் வெண்பாமாலை—ஐயனாரிதனார்
24. தொல்காப்பியம்—தொல்காப்பியர்
25. களவுநூல்—கர்ணீசுதர்
26. பாகவதம்—ஆரியப்பப்புலவர்.
27. திருவருட்பா—இராமலிங்க அடிகள்
28. திருவள்ளுவமாலை—..................
29. சிவஞான சித்தியார்—அருணந்தி சிவாசாரியர்
30. திருமந்திரம்—திருமூலர்
31. திருக்குறள் உரை—பரிமேலழகர், & திரு. கோ வடிவேல் [செட்டியார்
32. பெரியபுராணம்—கவி சேக்கிழார்
33. சதுர் அகராதி—திரு. வீரமாமுனிவர்
34. இலக்கியச் சொல்லகராதி—, சுன்னாகம். அ குமாரசாமி புலவர்
35. கார்னேஷன் அகராதி—..........................
36. ஆனந்தவிகடன் அகராதி—ஆனந்த விகடன் பதிப்பு
37. கழகக் கையடக்க அகராதி—சைவ சித்தாந்த நூற்பதிப்புக் [கழகப் பதிப்பு
38. பழமொழிக் களஞ்சியம்—..................
39. பல்லவர் வரலாறு, தமிழர் வரலாறு } தோழர். பி. டி. ஸ்ரீனிவாசய்யங்கார், M.A., L.T.,
40. இந்து தேச சரித்திரம்—தோழர் வ. திருவேங்கடத்தய்யங்கார், பி.ஏ., எல்,டி.,

41. இந்துச் சட்டம் (*Hindu Law*)—அரசியலார்.
42. அறிஞர் வ. ரா. வின் கட்டுரைகள்
43. மார்க்ஸியம்—தோழர் ஜமதக்னி
44. தமிழர் தலைவர்— ,, சாமி சிதம்பரனார்
45. சோழவமிசச் சரித்திரம்— ,, கோபிநாத ராவ்
46. திருவள்ளுவரும் பரிமேலழகரும்— ,, ரா. பி. சேதுப் பிள்ளை
47. தமிழர் சரித்திரம்—தோழர் என். எஸ். கந்தையா பிள்ளை
48. இந்திய தேச சரித்திரம்—ராமசாமி ஐயங்கார் B.A.,L.T..
49. ,, —,, ரங்கசாமி ,, ,,
50. ,, —,, S. நாராயண ,, ,,
51. ,, —,, சி. வி. ராமய்யர் ,,
52. திருமங்கையாழ்வார்—,, டி. ராமானுஜ ரெட்டியார்
53. ராமானுஜாச்சாரியர்—குமாரசாமி & சன்ஸ் பதிப்பு
54. ராமதாசர்—தோழர் டி. பார்த்தசாரதி ஐயங்கார்
55. விவேகானந்தர் } சென்னை ராமகிருஷ்ண மடம் பதிப்பு
56. ராமகிருஷ்ணர் } சென்னை ராமகிருஷ்ண மடம் பதிப்பு
57. சங்கராச்சாரியார்— ,, கணேஷ் கம்பெனி பதிப்பு
58. மத்வாச்சாரியார்—தோழர் சி. என். கிருஷ்ணசாமி ஐயங்கார்
59. மதவிசாரணை & ஞானசூரியன்— ,,சிவானந்த சரஸ்வதி.
60. ரமணவிஜயம்— ,, சுத்தானந்த பாரதியார்
61. ரமணமகரிஷியின் ரகசியம்—..................
62. பிரம்ம ஐக்ய வேதாந்த ரகஸியம்—,, கடப்பை சச்சிதானந்த [யோகீஸ்வரர்
63. நாயன்மார்கள் வரலாறு { தோழர். திரு. வி. க. / ,, கா. சு. பிள்ளை எம்.ஏ.எம் எல்.
64. பெரியபுராண ஆராய்ச்சி— ,, .ஈழத்தடிகள் பி. ஏ.,
65. ஆழ்வார்கள் வரலாறு — கழகப் பதிப்பு
66. தியாகராஜசுவாமிகள் சரித்திரம் — ..............................
67. ஜாதியை ஒழிக்க வழி?—தோழர் Dr. B. R. அம்பேத்கார்
68. ராஜாராம் மோகன்ராய்— ,, காரண. நரைக்கண்ணன்
69. காங்கிரஸ் தோற்று விட்டதா?—.......................

70. ஆரியர் திராவிடர் உண்மை—தோழர் பெரியார் ஈ. வே. ரா.
71. வீர சாவர்க்கர் வரலாறு—தோழர் தினகரன்
72. காங்கிரஸ் சரித்திரம்—தோழர் M.S. சுப்பிரமணிய ஐயர்
73. மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை வரலாறு—,, Dr. உ. வே. சா. ஐய
74. திராவிடப் போர் முரசு—,, P.N. ராமானுஜம் B.A.
75. திராவிடர் நிலை—,, தளபதி C.N. அண்ணாதுரை M.A.,
76. மேயோ கூற்று மெய்யா? பொய்யா?—கோவைஅய்யாமுத்து
77. சமுதாய ஒப்பந்தம்-ரூஸோ-தோழர்வெ. சா. சர்மாவின் பதிப்பு
78. தோழர் வி. ச. காண்டேகர் கட்டுரை—கவிஞர் மலரில் [உள்ளது
79. மொஹஞ்சாதாரோ—தோழர் மா. ராசமாணிக்கம் M.O.L., L.T.,
80. புலவர் ஆஸ்வால்ட் ஸ்பெங்க்ளேர் கட்டுரை
81. குமரிக் கண்டம்—சைவ சித்தாந்த கழகப் பதிப்பு

இன்னும் தருக்க நூற் சங்கிரகம், நாலடியார் முதலிய பிறவும்